# வாடாத காதல்



சொல்லாக்கியன்

# வாடாத காதல்

## சொல்லாக்கியன்



**சொல்லாக்கியம் வெளியீடு**
1/1 மண்ணடி அம்மன் கோயில் தெரு,
சங்கர் அடுக்ககம், ‘சி’ தொகுதி,
ஆதம்பாக்கம், சென்னை – 600088

வாடாத காதல் (கவிதைகள்)
ஆசிரியர்: சொல்லாக்கியன் ©

முதல் பதிப்பு: ஜூன் 2023

வெளியீடு: சொல்லாக்கியம்
1/1 மண்ணடி அம்மன் கோயில் தெரு,
சங்கர் அடுக்ககம், ‘சி’ தொகுதி,
ஆதம்பாக்கம், சென்னை – 600088
தொடர்பு: 9940369834 / 001 780 838 3993
dheena_subramanian@yahoo.com

அட்டைப்படத்திற்கு நன்றி: செல்வி. சாந்தலா

பக்கங்கள்: 240
விலை: ரூ.320

Vadatha Kathal (Poems)
by Sollakiyan ©
First Edition : June 2023
Published by :
Sollakiyam
1/1Mannadi amman kovil street,
Sankar Appartment, ‘C’ block,
Adambakkam, Chennai - 600088
Cell: 9940369834 / 001 780 838 3993
dheena_subramanian@yahoo.com

Pages: 240
Price: INR 320

Designer: G. Murugan

*காணிக்கை:*

*கவிதைத்தோழி கலைவாணிக்கு...*

# அணிந்துரை

*அவரை நான் பார்த்ததில்லை. என்னை அவர் பார்த்ததில்லை. என்றாலும் ஒருவருடன் ஒருவர் உரையாடினோம். உள்ளங்கள் இரண்டும் ஒன்றிப் போய் விட்டன.இதைத்தான் '' செம்புனல் பெயல் நீர் ''என்றெண்ணுகின்றேன்.தமிழ் என்னும் அன்பு - காணாத இரு வரை, உறவில்லா இருவரை, இணைத்து விட்டிருக்கிறது. இதுதான் எங்கள் இன்பத் தமிழாகும்.அந்த இன்பத் தமிழில் ஒரு காதலை அன்பர் சொல்லாக்கியன் சொல்லி இருக்கிறார். அது என்ன தெரி யுமா? அதுதான் ''வாடாத காதல்'' . வாடாத காதல் என்னும் மகுடத்தில் தன் உள்ளத்தில் உதித்த கருத்துக்களை எல்லாம் தெள்ளத் தெளிவாய், துள்ளி வரும் தமிழால் கவிதைகளாக்கி ஒரு நூலாய் அளித்திருக்கிறார். வாடாத காதல் என்னும் கவிதை நூல் வரமாய், உரமாய், அன்னைத் தமிழுக்கு வாய்த்திருக்கிறது என்றுதான் கருதுகின்றேன்.*

*இயற்கை, சமூகம், தமிழ், ஞானப் பிதற்றல்கள், அன்பின் உறவுகள், வாடாத காதல், வியப்பின் கூவல், என்று வகைப்படுத்தி தன் எண்ணங்களை வண்ணத் தமிழில் அளித்திருக்கிறார் சொல்லாக்கியன்.*

*இவரின் கவிதையில் சிலம்பு வருகிறது. திருவாசகத்தின் திருவண்டப் பகுதி வருகிறது. வள்ளுவர் வருகிறார். கம்பர் வருகிறார் . எங்கள் புரட்சிக் கவி பாரதி வருகிறார். பாரதி தாசனும் கூடவே வருகிறார். புதுக் கவிதையாய் மலர்ந்தாலும் அதில் ஒரு அழகு ஒளிர்கிறது. எதுகையும் வருகிறது. இங்கிதமும் தெரிகிறது. இதயத்திலும் அமர்கிறது. சொற்கள் வெற்றுச் சொற்களாய் வெளிவராமல் கருத்துக்களைச் சுமந்து வரும் காத்திரமான தமிழ்ச் சொற்களாய் அமைந்திருப்பது பாராட்டுக்குரியதாகும்.*

*இயற்கையைப் பார்க்கும் கவிஞரின் பார்வை இதயத்துள் பதிகிறது. அவரின் பார்வை பரந்து செல்கிறது.இயற்கை என்னும் பகுதியில்*

வருகின்ற கவிதைகளுக்குக் கொடுத்திருக்கும் தலைப்புகள் எங்குமே காணாத் தலைப்புகள் என்பேன்.வித்தியாசமாய் சிந்தித்திருக்கிறார்.

*வான்கடலில் மேகஅலையில் பிறைப்படகு - அந்த*
*காலவெளியில் பிரபஞ்சத்தில் ஒளிப்பயணம்*
*இருளே ஊடகமாய் முடிவிலா பெருந்தேகம் - ஆங்கே*
*உருவாகா கோலங்கள் புள்ளிகளாய் நட்சத்திரம்*

*அண்டம் பகிரண்டம் எல்லாம் கண்டோம் - ஆனால்*
*யாங்கணுமே புவியைப்போல் ஒன்றும் காணோம்*

*திரும்பிப் பார்த்தாலோ பூமியெழில் கோளம் - கரும்*
*நீலமும் பச்சையும் ஆடிடும் கலாபம்*

*அந்தியிலும் சந்தியிலும் தங்கத்தின் கலசம் - எழும்*
*அலையிலும் பனியிலும் வெள்ளொளி சகிதம்*

*வைரமாய் மின்னும் அதற்கில்லை ஒன்றீடு - உயிர்க்கு*
*அணியான மனிதாஅதை புனிதமாய் நீபாடு*

*நீ மலராய் பிறந்ததே பெருந்தவம்*
*அற்புத உயிர்களிடையே ஒரு விசித்திரம்*

*தொங்கிய முகத்துடன் மங்கிய ஒளியுடன்*
*வெள்ளைப் புடவை உடுத்து*
*கண்ணீர் முத்துக்களை வடித்து*
*துக்கத்தில் தீக்குளித்து உருகிக் கருகிறாயே*
*நிலவே நீஎன்ன விதவையா*

*குவளைக் கொடி*
*தளையவிழ் கூம்பு*
*துளைவிரி குழலாக*

*நீர்எழு மேகமென*
*பூஎழு வாசம்ஏகித்*

***தென்னலில் பிரித்தூவ***
***நனைந்த வண்டுமே***
***கண்மூடி மலர்தேடி***
***மாந்திய தேனிலே***
***முகமது கவிழ்ந்தே***
***ஒட்டிய தாதொடே***
***தள்ளாடி வெளித்தாவ***

***தாதுமணத் தேன்நகையே***
***பறக்குதேயெனத் தொடருமே***
***மற்றுமோர் மயங்குவண்டே***

*இயற்கையைப் பார்த்திடும் கவிஞரின் பார்வை இங்கே தமிழாய்க் கொட்டியே கிடக்குது.சிந்தனை சிறந்திடும் செந்தமிழ்ப் பார்வை. கவிஞரின் பார்வை கவினுறு பார்வை.*

*சமூகத்துள் நுழையும் கவிஞர் சொல்லாக்கியன் கருத்துக்களால் புரட்டிப் போடுகிறார்.*

***"அகண்ட பாரதமே எங்கள் கனவு - அதை***
***அடைவது ஒன்றே எங்கள் இலட்சியம்"***

*என்று காலடி எடுத்து வைக்கிறார் சமூகத்துக்குள். இனியொரு விதி செய்வோம் என்னும் அவரின் குரல் எட்டயபுரத்து ஏந்தலை எம்முன்னே கொண்டுவந்து காட்டுகிறது.*

***ஆயிரம் ஆயிரமாய் மக்கள் அணிவகுக்க***
***மாதரும் மழலைகளும் அணிகளுக்கும் அழகுசேர்க்க***
***களிற்று நடையால் மண்ணதிர***
***உரிமைக் குரலால் விண்ணதிர***
***காந்தியின் வழியில் நடந்திட்ட***
***ஆயுதம் இல்லாப் போராட்டத்தை***
***இலட்சோப இலட்ச மக்கள் பார்க்கும் போதே***
***கோடானுக் கோடி மக்கள் செவிசாய்க்கும் போது***
***தொலைநோக்குத் துப்பாக்கியால் குறிபார்த்துச் சுட்டு***
***கொன்று ஒழித்தக் கோழைகளின் கதையை***
***பாருக்கும்,நல்லறிவு மாந்தருக்கும், எதிர்வரும் காலத்திற்கும்***

*பரணியாய்ப் பாட வந்தேன், சொல்லாக்கியன் நானே!*

*சொல்லாக்கியனின் சமூகம் என்னும் பகுதி நீண்ட பெரும் பகுதியாய் நெஞ்சின் குமுறல்களாய், நிலைத்திடும் கருக்களால் நிறைத்தே நிற்கிறது.*

*குமுறிய உள்ளத்துக்கு ஒத்தடம் தருவதாய் அவர் அமைத்திருக்கிறார் அடுத்து எங்களின் இன்பத் தமிழை. ஆம் ... தலைப்பாய் ''தமிழ்'' ஜொலிக்கிறது.*

*தமிழ் வெறும் பேச்சல்ல - அது*
*எங்கள் மூச்சு*

*தமிழ் கீறும் எழுத்தல்ல - அது*
*அழகு தலை எழுத்து*

*தமிழே எமக்குத் தாலாட்டு - எம்*
*தமிழும் நிலவும் சோறூட்டும்*

*தமிழூடே எங்கள் புலனறியும் - அத்*
*தமிழாலே எங்கள் மனமறியும்*

*தமிழால் இழைவது எண்ணம் - புது*
*சிந்தனை குழைவது திண்ணம்*

*தமிழிலே எங்கள் கல்வி - வெல்*
*தமிழிலே எங்கள் ஆட்டம்*

*தமிழிலே பண்ணுடைப் பாட்டு - பொன்*
*யாழிலே இசையுடைக் கூத்து*

*தமிழிலே சதிரெனும் நாட்டியம் - வண்ணத்*
*தமிழில் சித்திரம் ஓவியம்*

*தமிழொலி கொத்தினால் சிற்பம் - தண்ணத்*
*தாமிரம் கொட்டினால் சிலையாம்*

*தமிழிலே எழுப்புவோம் கோபுரம் - நம்*

*தமிழிலே அடங்கும் ஓங்காரம்*
*தமிழோடே ஏரும் நீரும் - பல்*
*தமிழோடே களையும் விளைவும்*

*தமிழேதான் பாலும் தேனும் - அதற்கு*
*ஈடுண்டோ பாரில் எங்கணும்*

இன்பத் தமிழ் பற்றி எண்ணும் அனைத்தையும் தேனாய் செவிகளில் பாய்ச்சி நிற்கிறார் இப்பகுதியில்.தாலாட்டுப் பாடி தமிழை ஏந்தியும் நிற்கிறார்.

ஞானப் பிதற்றல்கள் திருவண்டப் பகுதியைச் சிந்தையில் வைப்பதாய் தெரிகிறது. இப்பதியில் வருகின்ற அத்தனையும் சிறப்பான தேடல்கள்.சிந்தைக்கு நல் மருந்து.

*மலரின் விடுதலை*
*மரமிருந்து மண்ணிற்கு புறப்படும் காலம்*
*மலரின் சுதந்திரம்*
*வெளியில் காற்றில் பயணிக்கும் தூரம்*

*உயிரின் விடுதலை*
*உடலிருந்து விண்ணுள் வெளியாகும் கணம்*
*உயிரின் சுதந்திரம்*
*மெய்யின் உணர்வில் களியாகும் காலம்*

*தூக்கம் சிறு மரணமா?*
*மரணம் பெரு தூக்கமா*

*கண்விழித்தலே பிறப்பா?*
*கண்மூடலும் இறப்பா?*

*வாழ்வே வெறும் இமைத்தலா?*
*நொடியில் மாத்திரை மறைதலா?*
*எங்கெங்கும் உள்ளதோ*
*எல்லாரிடத்தும் உள்ளது*
*எல்லாரிலும் உள்ளதே*
*உன்னிடத்தும் உள்ளது*

*உன்னுள்ளத்தை உணர்ந்தால்*
*இடையறாதைப் புணர்வாய்*
*அதையும் மறந்தால்*
*சிவமாய் சமைவாய்*

ஞானப் பிதற்றல் நல்ல பிதற்றலாகவே அமைகிறது. மூலரை நினைவில் வைத்திட வைக்கிறது.

ஞானப் பிதற்றல்களின் பின்னே, அன்பின் உறவுகள் அகத்தில் அமர்கிறது. அதன்பின் கவிதை நூலின் மணிமகுடம் ''வாடாத காதல்'' தென்றலாய் வருகிறது.வாடாத காதல் வகைவகையாய் காதல்.ஔவையைத் தொட்டிடும் ஆனந்தக் காதல்.

*வாலைக் குமரியடி நீ - வாய்*
*திறந்தால் தமிழின் அமுதமடி*

*மங்கை மடந்தையடி நீ - கண்*
*நகையில் சிந்தையில் புள்ளி கலங்குதடி*

*அரிவை தெரிவையடி நீ - புன்*
*சிரிப்பில் உயிரே நொறுங்குதடி*

*நரையும் திரையுமா நீ - என்*
*இளமைக் காதல் அழகியடி*

வாடாத காதல் தொடங்கும் இடமே அருமை. அருந்தமிழ் ஔவை மேல் காட்டும் காதல் - உண்மையில் வாடாத காதல்தான்.

*கருங்குழல் அருள்நுதல் தவழக் கண்டேனே*
*இருள்வாள் மருள்நிலவு தழுவக் காண்பேனா*

*வில்புருவக் கொல்லேற்றம் அலறியது என்நெஞ்சம்*
*வல்மரணக் கழுவேற்றம் இளக்காரம் என்இதழோரம்*

*கண்கள் மலர்மாரி நனைந்த உள்ளமே*
*குளத்தின் குவளைகள் நினைக்க எண்ணுமோ*

*சிமிட்டல் நழுவும் பார்வை கண்டபின்*
*சிறுகுட்டை மீன்கள் நீந்தல் வேண்டுமா*

சத்தமின்றி முத்தம் குளித்துப் பின்னமே
எதற்குஅப் பாலும் தேனும் வேண்டாமே !

தீராத தாகங்களும்
விடியாத கனவுகளும்
முடியாத கற்பனையும்
வெளிப்படும் வழியின்றி
பெருமூச்சில் வெடிக்கும்
உன்றன் பெயர் !

கண்ணின் காந்தப் புலத்தின் அலையே
தோலுக்குள் தசையுள் அக்குள் சிக்குள்
வெளியில் ஒலியொடு நிமிர்ந்து இணைபாட
நின்றது காதல் யுகாந்திரமாய்

அ என்றால் அகமாகும்
உ என்றால் புறமாகும்
அவும் உவும் ஓ என்றால் முழுதாகும்
ஓ என்றால் சிறு முழுவதும் பெருமுழுதாகும்
ம் என்றால் புலன்கள் அடங்கலாகும்
மான்செவி மடுத்தலாகும்
செவிக்குணவு ஈதலாகும்
பிராணமகுடிக்கு உடல்ஆடும்
சுவாசுடல் முயங்க காலங்கள் மயங்கும்
சும்மா இருத்தலே இரசவாத சுகமாகும்

தாழம் மடலதை விரித்து
நீவிடப் பன்னீர் தெளித்து
பீலியால் தடவி இறுத்து

செஞ்சாதி மொக்கை எடுத்து
அகிற்கோல் பட்டுவளை தொடுத்து
சந்தனக் கத்தூரி தோய்த்து

தமிழ்க் காதல் வரையவா
அமிழ்தும் தேனும் உறையவா
இடமும் பொழுதும் மறையவா

*வாடாத காதல் கடலினுள் மூழ்கினேன். முத்துக்கள் பல கண்டேன். எல்லா முத்துக்களையும் எனதாக்கிட ஆசைதான். அப்படிச் செய்வது முறையாகுமா? நீங்களும் அந்த முத்துக்களைத் தேர்ந்திட வேண்டாமா? எடுங்கள் காதல் முத்துக்கள் குவிந்து கிடக்கின்றன.*

*நிறைவாக வியப்பின் கூவல் வியந்திட வந்திருக்கு.*

***அரும்பு மொட்டின்றி***
***வெள்ளாறு பூத்தது***
***வண்ண வண்ண மலர்கள்.***

*படித்ததோ பாதுகாப்பும், சட்டமும், ஆங்கிலமும். பிடித்ததோ தேமதுரத் தமிழை. பதவிகள் பல வகித்தாலும், பட்டங்கள் பல பெற்றாலும் - நாடுவதும் தேடுவதும் தமிழ் வழியையே. தீனதயாளன் தமிழுக்காய் சொல்லாக்கியன் ஆகினார். சொற்களைத் தேடினார். சுவையுடன் சொல்லவும் புறப்பட்டார். அவரின் புறப்பாட்டால் பல நூல்கள் வெளிவந்தன. திருக்குறள் மறு வாசிப்பு அவரின் ஆராய்ச்சியின் உச்சம் என்றே எண்ணுகின்றேன். ஆராய்ச்சி வல்லுனரான அவர் கவிதை என்னும் கடலினுள் மூழ்கி, எம்மையும் மூழ்க வைத்திட எண்ணங் கொண்டார். அதன் விளைவுதான் ''வாடாத மலர்'' என்னும் கவிதை நூலாக மணம்பரப்ப வந்திருக்கிறது. சங்கத் தமிழையும், சாதாரண தமிழையும் கவிதை ஊடாகக் காட்டி எம்மையெல்லாம் வாடாத மலரினை நுகரச் செய்திருக்கின்றார். தமிழுக்கு வரமாய் அமைந்த இக்கவிதை நூலுக்கு அணிந்துரை வழங்குவதில் அக மகிழ்வடைகின்றேன். தீனதாயாளன் என்னும் சொல்லாக்கியன் அவர்கள் மேலும் பல பயனுள்ள நூல்களை ஆக்கிட எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிய வேண்டிப் பிரார்த்திக்கின்றேன்.*


***மகாதேவஐயர் ஜெயராமசர்மா***

B.A (Hons) Dip. in Edu, Dip. in Soc,
Dip.in Com, M.Phil Edu,SLEA

*மேனாள் தமிழ்மொழிக் கல்வி இயக்குநர்*
*சிட்னி உதயசூரியன், கனடா அன்புநெறி, சிறப்பாசிரியர்,*
*அக்கினிக்குஞ்சு இலக்கிய ஆலோசகர் குழுத் தலைவர்,*
*மெல்பேண் தமிழ்ச்சங்க ஆலோசகர்*
*மெல்பேண் ... ஆஸ்திரேலியா*

# வானவில்லின் எந்த வண்ணம் அழகு..?

*பல்லாயிரமாண்டுகாலத் தொன்மையும் செழுமையுமிக்க தமிழ் மொழியை ஒரு கவிதை மொழி என்று சொல்வதும் சரியானதே. உலக மொழிகளில் ஆதி மொழியென மொழியியல் ஆய்வறிஞர்களால் கொண்டாடப்படும் செம்மொழியான தமிழ் மொழியில், சங்க கால இலக்கியங்கள் யாவும் காப்பியங்களாகவே படைக்கப்பட்ட பெருமையுடையது.*

*சங்க காலத்தில் எழுதப்பட்ட பல இலக்கியங்கள் கால வெள்ளத்தால் அழிந்து போயினும், எஞ்சியிருக்கும் படைப்புகளில் தமிழின் பெருமையையும் வளமையையும் நம்மால் கண்டுணர முடிகிறது. இலக்கிய நூல்கள் மட்டுமின்றி, பல இலக்கண நூல்களும் தமிழின் பெருமைக்குச் சான்று பகிர்கின்றன.*

*தமிழின் மிகவும் தொன்மையான நூல் எனப்படும் தொல்காப்பியம், இதுவரை தமிழில் கிடைத்த இலக்கண நூல்களிலேயே முதன்மையான நூலாகும். தொன்மை + காப்பியம் என்றும், தொல் + காப்பு + இயம் என்றும் தொல்காப்பியத்தைப் பிரித்து பொருளறிந்துகொள்ள முடிகிறது.*

*'உலக மொழிகளெல்லாம் இலக்கியத்திற்கு இலக்கணம் கண்ட நிலையில், இலக்கணத்திற்கே ஓர் இலக்கியம் படைத்த பெருமையுடையது தமிழ் மொழி' என்பர்.*

*பண்டைய தமிழ் மக்கள், அகம், புறம் என தங்களது வாழ்க்கை முறையினை இரு பிரிவாகப் பகுத்தனர். காதல், மன உணர்வுகளை அகமென்றும், கொடை, வீரம் முதலானவற்றை புறமென்றும் பிரித்து பாடல்களை இயற்றினர். தமிழர்களின் கலாச்சாரத்தையும், உணவு - உடை - இருப்பிட நாகரீகத்தையும், பண்பாட்டு விழுமியங்களையும் தெரிந்துகொள்வதற்கான மூல ஆதாரமாகத் திகழ்வது தொல்காப்பியமே.*

*தொல்காப்பியம் எழுதப்பட்ட காலம் கி.மு. 3-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்றும், கி.மு. 5-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது என்றும், கி.மு. 6-ஆம் நூற்றாண்டிற்கு முந்தையது என்றும் பலரும் பலவாறு கூறுகின்றனர். இன்னும் தொல்காப்பியம் எழுதப்பட்ட காலத்தினை யாராலும் அறுதியிட்டுக்கூற இயலவில்லை.*

*தமிழின் ஆகச் சிறந்த இலக்கண நூல் என்பதைவிடவும், மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே அறிவுசார் சிந்தனைகளையுடைய நூலாகத் தொல்காப்பியம் விளங்கியிருக்கிறது என்பது அதன் தனிச் சிறப்பாகும்.*

*உலக உயிர்களனைத்தையும் ஓரறிவிலிருந்து தொடங்கி, ஆறறிவு வரைக்குமான வகைப்படுத்தலோடு உயிரினங்களின் பெயர்ப் பட்டியலைத் தந்திருப்பதும், அதற்கான சூத்திரங்களை வகுத்திருப்பதும் தொல்காப்பியரின் அறிவியல் சிந்தனைக்குச் சான்றாகும்.*

**‘புல்லும் மரனும் ஓரறி வினவே**
**பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.’ *(பொருள்: 572)***

*என்று ஓரறிவில் தொடங்கி,*

**‘மக்கள் தாமே ஆறறி வுயிரே**
**பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே.’ *(பொருள்: 577)***

*என்று ஆறறிவு வரைக்கும் வகைப்படுத்தி, தாவரவியல், உடற்கூற்றியல், பறவையியல், விலங்கியல் என அன்றைக்கே அறிவியலின் பல துறைசார் அறிவோடு பகுத்திருக்கும் முறைமை வியப்புக்குரியதே.*

*மரபுப் பாடல்களாகவும், செய்யுள்களாவும் இருந்த தமிழ்க் காப்பியங்கள் வெகுமக்கள் மத்தியில் பரவலாகச் சென்றடையவில்லை. சங்கப் பாடல்களின் இலக்கண மரபுகள், எளிய மக்களிடமிருந்து இலக்கியத்தைச் சற்றே ஒதுக்கி வைத்தன.*

*ஆங்கிலேயர்களின் வருகைக்குப் பின்னரே, ஆங்கில மொழியைக் கற்றறிந்த தமிழர்களின் ஆங்கில இலக்கிய நூல்களின் வாசிப்பினூடாக தமிழிலக்கியத்தில் புதுக்கவிதை, சிறுகதை, புதினம் ஆகிய வடிவங்கள் அறிமுகமாயின.*

*கட்டற்ற கவிதை என்றும், சுதந்திரக் கவிதை என்றும் மகாகவி பாரதி, தமிழ்க் கவிதைக்குப் புது இரத்தம் பாய்ச்சினார். ஆனாலும்,*

*பண்டிதக் கூட்டம் பாரதியின் கவிதைகளை 'வசன கவிதை' என்றே வசை பாடினர். இதைக் கண்டு கலங்கி நிற்கவில்லை பாரதி.*

***'ஞாயிறே! நின்னிடத்து ஒளி எங்ஙனம் நிற்கின்றது?***
***நீ அதனை உமிழ்கின்றாயா? அது நின்னைத் தின்னுகிறதா?***
***அன்றி, ஒளி தவிர நீ வேறோன்றுமில்லையா?***
***விளக்குத்திரி காற்றாகிச் சுடர் தருகின்றது.***
***காற்றுக்கும் சுடருக்கும் எவ்வகை உறவு?***
***காற்றின் வடிவே திரியென்றறிவோம்.***
***ஒளியின் வடிவே காற்றுப் போலும்.***
***ஒளியே நீ இனிமை.'     (ஞாயிறு: 7)***

*பாரதியே காற்றாய், ஒளியாய், இனிமையாய் எங்கெங்கும் பரிணமித்தார். தமிழ்க் கவிதை உழைக்கும் மக்களின் காதுகள் வழி பாய்ந்து, உள்ளங்களைத் தொடலாயின. எளிய மனிதர்களின் கைகளிலும் இலக்கியச் செங்கோல் ஆட்சி செய்யத் தொடங்கியது.*

*இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாரதி புதுக்கவிதைகளை எழுதி அறிமுகம் செய்ததைப் போலவே, ஜப்பானிய ஹைக்கூ கவிதைகளைப் பற்றியும் 'சுதேசமித்திரன்' (16 அக்டோபர் 1916) இதழில் எழுதி, முதல் அறிமுகத்தைத் தந்தார். இன்றைக்குத் தமிழில் புதுக்கவிதைகளும் ஹைக்கூ கவிதைகளும் செழித்து வளர்ந்திருக்கிறது என்றால், அந்தப் பெருமைக்கும் சிறப்புக்கும் முழு முதற்காரணமானவர் மகாகவி பாரதி என்பதில் இரு வேறு கருத்திருக்க முடியாது.*

*பாரதி போட்டுத்தந்த பாட்டுத் தடத்தில் புதுக்கவிதை, ஹைக்கூ கவிதை என இரு தடத்திலும் தனது கவிமுத்திரையைப் பதித்து கம்பீரமாக நடைப்போட்டு வருகிறார் இனியவர், கவிஞர் சொல்லாக்கியன். கவிஞரது எளிய சொல்லாடலும், சிக்கலில்லாத மொழியும் அனைத்துத் தரப்பு வாசகர்களையும் ஈர்க்கும் என்பது எனது எதிர்பார்ப்பு.*

*வானவில்லின் ஏழு வண்ணங்களைப் போல், 'இயற்கை'யில் தொடங்கி, சமூகம், தமிழ், ஞானப் பிதற்றல்கள், அன்பின் உறவுகள், வாடாத காதல், வியப்பின் கூவல் வரை ஏழு தலைப்புகளின்கீழ் தனது கவிதைகளைப் படைத்தளித்துள்ளார் கவிஞர் சொல்லாக்கியன். வானவில்லின் அழகில் எந்த வண்ணம் அழகென்று பிரித்துக்கூற முடியாதோ, அவ்வாறே இந்த ஏழு தலைப்புகளிலுள்ள கவிதைகளும் என்னை ஒருசேரக் கவர்ந்தன.*

*'ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்பார்களே, அப்படியாக ஏழு தலைப்புகளிலும் எனக்கு மிகவும் பிடித்த கவிதை ஒன்றினைக் குறித்து பகிர்ந்திட ஆவல்.*

***'தலைக்கு மேலே***
***மூன்று கத்திகள்***
***மாற்றி மாற்றி***
***அதை வெட்டிச் சாய்த்தன'***

*'மின் விசிறி' எனும் தலைப்பிலான ஒரு கவிதை இப்படியாகத் தொடங்குகிறது. சாதாரண கவிதை போல் இருந்தாலும், கவிதையை முடிக்கையில் நமக்குள் நம்பிக்கையை சுடர்விடச் செய்கிறார் கவிஞர் சொல்லாக்கியன்.*

***'காற்றோ***
***மீண்டும் மீண்டும் உயிர்த்தெழுந்து***
***உயர எழுந்தது.'***

*அடுத்தது, 'தலையில் எங்கே?' எனும் தலைப்பிலான கவிதை. வெறும் கேள்விகளாலான கவிதையென்றாலும், காலங்காலமான கேள்வியிது. ஒவ்வொரு கேள்வியும் சம்மட்டி அடிபோல் இந்தச் 'சமூக' அமைப்பின் மீது வலுவாக விழுகிறது. வேதாளம் கேட்கும் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாமல், விக்கிரமாதித்யனின் தலை சுக்கு நூறாக உடையட்டும் என்றே எண்ணத் தோன்றுகிறது.*

*தமிழின் சிறப்பைச் சொல்லும் எல்லாக் கவிதைகளுமே தமிழைப் போலவே இனிதாயிருந்தன.*

***'தமிழிசை ஓதம் - இத்***
***தரணியின் வேதம்'***

*- எனும் வரிகளும்,*

***'தமிழின் உயிரே இசையின் உயிரே***
***அமிழ்தைக் கடையும் ஒலியின் கயிரே'***

*- எனும் வரிகளையும் பெரிதும் ரசித்தேன்.*

***'மரணம் எனும் முடிவில்லா நாடகத்திற்கு***
***இரவுகள் ஒவ்வொன்றிலும் நடக்கும் ஒத்திகை!'***

*என்று 'தூக்கம்' கவிதையில் சொல்லியிருப்பதை வெறும் 'ஞானப் பிதற்றல்கள்' என்று சொல்லிட ஏனோ என் மனம் ஒப்பவில்லை.*

*‘அன்பின் உறவுகளில்’ வரும் ‘நண்பா!’ கவிதை அற்புதம். இந்தக் கவிதையைப் படித்த பிறகு, கவிஞரது நண்பர்கள் வட்டத்தில் நானும் ஒருவனாகிப் போனேன்.*

*காதல் உணர்வுகளின் மெல்லிய தளும்பலாய் நம்மை ஈர்க்கின்றன ‘வாடாத காதலில்’ இருக்கும் எல்லாக் கவிதைகளுமே. கவிதையைப் பிடிக்காதோரும், காதலை ருசிக்காதோரும் இம்மண்ணில் யாருமுண்டோ..?*

***‘உன்னை நான் கண்டதும்***
***என்னையே காணவில்லை!’***

*– என்றெழுதியிருக்கும் கவிஞர் சொல்லாக்கியன், கவிதையின் முடிப்பில் –*

*‘உன் கொலுசில் நான் ஒலிந்திருப்பேன்’ என்று எழுதியிருப்பதைப் படித்ததும் எழுத்துப்பிழையோ என்றே முதலில் ஐயுற்றேன். பிறகுதான் தெரிந்தது, அது பிழையல்ல, கொலுசில் ஒளிந்திருக்கும் ஒலி தானே காதலனின் வருகையை இசையாக மொழிபெயர்க்க முடியுமென்கிற உண்மை புலப்பட்டது.*

*நிறைவாக, ‘வியப்பின் கூவலில்’ 208 சிந்தனை முத்துக்களை மூவரி கவிதைகளாகக் கோத்து தந்துள்ளார் கவிஞர். செறிவான வார்த்தைகளும், கவித்துவமும் சேர்ந்திருந்த பல கவிதைகள் மீண்டும் படிக்கத் தூண்டின. அறிவார்ந்த தளத்தில் சிந்தனைச் சாரல்களாக மிளிரும் இக்கவிதைகளில் இன்னும் காட்சியழகும் கைகூடும்போது இவை ஹைக்கூப் பூக்களாகவும் மலரக்கூடும்.*

***‘மண்ணைப் பிளந்தது***
***நாளைய மரம்***
***நேற்றைய விதை.’***

***‘வான் நிற்கும் கழுகு***
***தரை இறங்கும் நிழல்***
***வளை தேடும் எலி.’***

***‘முதல் மழை***
***வீசும் வாசம்***
***மண் பூத்தது.’***

*இவை மூன்றும் எனக்கு மட்டுமல்ல, வாசிப்பில் உங்களுக்கும் பிடித்துப்போகும் ஹைக்கூ கவிதைகள் என்று உறுதியாகச் சொல்வேன்.*

*இப்படியாக இன்னும் சில கவிதைகளைச் சொல்லலாம். வாசகர்கள் மேலும் சில சிறப்பான கவிதைகளை இந்நூலில் கண்டடைவார்கள் என்றே நம்புகின்றேன்.*

*கவிஞர் இன்னும் பல கவிதை நூல்களைப் படைக்கவும், தொடர்ந்து கவிதைத் தளத்தில் ஆற்றலுடன் செயலாற்றிடவும் வேண்டுமென்கிற எனது வேண்டுகோளைப் பகிர்கின்றேன்.*

*அன்பினிய கவிஞர் சொல்லாக்கியனுக்கு எனது பேரன்பில் பூத்த வாழ்த்துகளைப் பகிர்ந்து மகிழ்கின்றேன்.*

*15.06.2023*

**மு. முருகேஷ்**
*முதுநிலை உதவி ஆசிரியர்,*
*'இந்து தமிழ் திசை' நாளிதழ்,*
*சென்னை - 600 002.*
*கைப்பேசி: 74013 29364*
*மின்னஞ்சல்:* haiku.mumu@gmail.com

## சிந்தாமணி

*வான்கடலில் மேகஅலையில் பிறைப்படகு - அந்த*
*காலவெளியில் பிரபஞ்சத்தில் ஒளிப்பயணம்*
*இருளே ஊடகமாய் முடிவிலா பெருந்தேசம் - ஆங்கே*
*உருவாகா கோலங்களின் புள்ளிகளாய் நட்சத்திரம்*

*அண்டம் பகிரண்டம் எல்லாம் கண்டோம் - ஆனால்*
*யாங்கனுமே புவியைப்போல் ஒன்றும் காணோம்.*

*திரும்பிப் பார்த்தாலோ பூமியெழில் கோளம் - கரும்*
*நீலமும் பச்சையும் ஆடிடும் கலாபம்.*

*அந்தியிலும் சந்தியிலும் தங்கத்தின் கவசம் - எழும்*
*அலையிலும் பனியிலும் வெள்ளொளி சகிதம்*

*வைரமாய் மின்னும் அதற்கில்லை ஒன்றீடு - உயிர்க்கு*
*அணியான மனிதாஅதை புனிதமாய் நீபாடு*

*அருமை அற்புதத்தை அலுக்காதே குலுக்காதே - எம்*
*சிந்தாமணியை நந்தாவிளக்கை சிதறாதே உதறாதே!*

## மலரே

*நீ மலராய்ப் பிறந்ததே பெருந்தவம்*
*அற்புத உயிர்களினிடையே ஒரு விசித்திரம்*
*உன்னுடைய வாசம் எல்லா உயிர்களிலும் பிரவேசிக்கட்டும்*
*நீ அழிந்தப் பின்னும் அது நிரந்தரமாக வாசம் செய்யட்டும்*
*வெறுமை அடைந்த நெஞ்சங்களில் நிர்மலமான நிம்மதியை நிரப்பட்டும்*
*நீ உதிர்ந்தாலும் உன் நினைவுகள் பசுமையாய் நிலைத்தோங்கும்*
*அன்பைத்தேடி தேனைநாடி ஆயிரம் சிறகுகள் பாடட்டும்*
*இதழ்களில் தவழும் அமுதத்தை உறவு பாராமல் முத்தங்களைச் சொரிந்திடும்*
*எறும்புகள், ஈக்கள், வண்டுகளின் களியாட்டத்தை தென்றல் உலகெங்கும் தாரையூதும்*
*உன்றன் மங்கல மகரந்தங்கள் பல இதயங்களில் கருத்தரிக்கட்டும்*
*நீ மக்கி மண்ணானாலும் உன்னுடைய கருத்துகள் ஒவ்வொரு வசந்தத்திலும் பிரகாசிக்கும்*
*அக்கருத்துகளின் சந்ததிகள் உனக்கு ஒரு முடிவுறாத சரித்திரத்தைத் தீட்டும்*
*அவைகளின் வாசம் எல்லா உள்ளங்களையும் உன்கல்லறைக்கு கொண்டுவரும்*
*அவைகளின் தேன்துளிகள் உன்னை அபிசேகம் செய்யும்*
*அவைகளின் இதழ்கள் அருச்சனை செய்யும்*
*அதுதான் உன்னுடைய யோகம்.*

## வான் நாடு

*அந்த நீலநாட்டு இளவரசி*
*எழிலரசி! நிலவழகி!*
*அவள் எங்கே போகிறாள்?*

*மேக கம்பளத்தில் வீற்று*
*'தென்றல்' எனும் மந்திரம் கூறி*
*நட்சத்திர மக்களைக் கண்டிட*
*பறந்து செல்கிறாளா?*

## சுமங்கலியா? விதவையா?

*மேற்குக் கடலில் மஞ்சள்பூசிக்குளித்து*
*செம்பட்டுப் புடவை உடுத்தி*
*கொண்டை நிறைய மல்லிப்பூ செருகி*
*தென்றலில் நாணத்தில் நடை பயில்கிறாயே*
*நிலவே, நீ சுமங்கலிதானே?*

*தொங்கிய முகத்துடன் மங்கிய ஒளியுடன்*
*வெள்ளைப் புடவை உடுத்து*
*கண்ணீர் முத்துகளை வடித்து*
*துக்கத்தில் தீக்குளித்து உருகிக் கருகுகிறாயே*
*நிலவே நீஎன்ன விதவையா?*

## மச்சம்

*தென்றலும் கண்ணன்தான்*
*ஆகா, எத்தனை கோபியர்கள் அவனுக்கு!*

*ஒரு மலரில் சூடான இதழ்பதித்து*
*வாசத்தேனை உறிந்துக் குடிக்கும்போது*
*அம்மலர் நாணத்தால் தலைகவிழ்ந்து*
*ஓரக்கண்ணால், இமை படபடக்க, நோக்கும்.*

*இவனோ ருசி கண்ட பூனை போல்*
*இன்னொரு முத்தம் கேட்க*
*அம்மலரோ, 'உம்' என்பதை 'ஊகூம்' எனும்.*
*பொறாமையில் எரியும் செந்தளிர்கள்*
*பிறபூக்களிடம் கோள் சொல்ல*
*பூக்கூட்டம் நெக்கியடித்து*
*ஆளுக்கு நூறு முத்தம்*
*பொழிந்து தள்ளின.*

*இன்ப வெள்ளத்தில் பறந்தவன்*
*நிலவென்னும் ராதையிடம் அடைக்கலம் கேட்பான்*
*அவளோ மேகத்துகிலால் முகம் மறைத்து ஊடுவாள்*
*என்ன செய்வதென்று விழிக்கையில்*
*நட்சத்திர பரத்தைகள் கண்ணடித்து அழைக்கும்.*

*ஒருவேளை*
*தென்றலுக்கு, தெரியாத இடத்தில் மச்சமுண்டா?*

## மின்விசிறி

*தலைக்கு மேலே*
*மூன்று கத்திகள்*
*மாற்றி மாற்றி*
*அதை வெட்டிச் சாய்த்தன.*

*என் உடலெல்லாம்*
*அதன் குருதியால்*
*சிலிர்த்துக் குளிர்ந்தது.*

*ஆனால்,*
*காற்றோ*
*மீண்டும் மீண்டும் உயிர்த்தெழுந்து*
*உயர எழுந்தது.*

# திமிங்கலம்

*மலையில் புரண்டது காற்று*
*காற்று எனும் அலை.*

*அலையில் மிதந்தது பிறை*
*பிறை எனும் படகு.*

*படகைத் தொடர்ந்தது மேகம்*
*மேகம் எனும் வலை.*

*வலையில் அடர்ந்தது நட்சத்திரம்*
*நட்சத்திரம் எனும் மீன்கள்.*

*சட்டென,*
*எல்லாம் விழுந்தன ஒளியில்*
*ஒளி எனும் கடல்.*

*எழுந்தது கிழக்கில் சூரியன்*
*சூரியன் எனும் திமிங்கலம்.*

**ஊழ்**

*நான் பிறந்தது என் ஊழல்ல!*

*தந்தையின் அளவிலா ஆசைகளும்*
*தாயின் நனவாகா கனவுகளுமே*
*என்னை இவ்வுலகில் பிரசவித்தன!*

*பாட்டன்களின் அதிகார ஆணவமும்*
*பாட்டிகளின் சதிகார மௌனமும்*
*என்மனதில் முரண்கள் செய்கின்றன!*

*மூதாதைகளின் ஆதிக்கக் கணங்களும்*
*மூதிகளின் அடிமைத் தனங்களும்*
*என்நெஞ்சில் ஊசல் புரிகின்றன!*

*ஆதிமனிதனின் அறிவை மட்டுமல்ல*
*ஆதிவிலங்கின் வெறியையும் சுமக்கிறேன்*
*சின்னஞ் சிறுமூளை தன்னில்!*

*காலத்தின் பெரும் மூட்டைகளை*
*வரலாற்றின் கொடும் பாரங்களை*
*உதிர்ப்பதிலே என்வாழ்வு முடிகின்றது!*

*இடையில் ஒருநாள் நள்ளிரவில்*
*நானும் அவளும் இணைகின்றோம்*
*உயிரும் உடலுமாய்ப் பிறக்கின்றார்!*

*மக்கள் பிறப்பதும் அவர்தம் ஊழல்ல!*

## ஜகதீச சந்திர போஸ்

*மண்ணிலமே அதிர்ந்து உணர்ந்து இமிழ*
*தண்புனலே தவழ்ந்து சுவைந்து உமிழ*
*குலவுதென்றலே சுழன்று நுகர்ந்து முகிழ*
*உலவுவெம்மலே விழிந்து கண்டு மகிழ*
*களவுவெளியே குழிந்து கேட்டு நெகிழ,*

*பாம்பின் உடலம் செவிமடல், கேட்காதா?*
*தும்பியின் துளைகள் கண்கள், இமைக்காதா?*
*புள்ளின் அலகு மூக்கு, முகராதா?*
*புல்லின் இதழ்கள் நாக்கு, சுவைக்காதா?*
*செம்பின் தண்மை மேனி, உணராதா?*

*காண்பன எல்லாம் உயிராமே - அவை*
*உணர்வன நல்லாம் அறிவாமே!.*

## மயக்கம்

*குவளைக் கொடி*
*தளையவிழ் கூம்பு*
*துளைவிரி குழலாக*

*நீர்எழு மேகமென*
*பூஎழு வாசம்ஏகித்*
*தென்னலில் பிரித்தூவ*

*நனைந்த வண்டுமே*
*கண்மூடி மலர்தேடி*
*மாந்திய தேனிலே*
*முகமது கவிழ்ந்தே*
*ஒட்டிய தாதொடே*
*தள்ளாடி வெளித்தாவ*

*தாதுமணத் தேன்நகையே*
*பறக்குதேயெனத் தொடருமே*
*மற்றுமோர் மயங்குவண்டே!*

## அகில பாரதம்

*அகண்ட பாரதமே எங்கள் கனவு - அதை*
*அடைவது ஒன்றே எங்கள் இலட்சியம்.*

*வடக்கே*
*முதல்போரில் இழந்த பாகிஸ்தான காஷ்மீரம்*
*தெற்கே*
*சீதாராமனை எதிர்த்த இராவண சிங்களம்*
*கிழக்கே*
*நாம்விடுதலை செய்த வங்காள தேசம்*
*மேற்கே*
*நமக்கே கேடுறும் பாகிஸ்தான் ஆப்கானம்*

*தமிழரே அடிமையான பின்-முன்*
*அவராண்ட நாடுகளும் அடிமைதாமே*
*பர்மம், மலாயம், தாய்நிலம், சாவகம்*
*கொரியம், காம்போஜம் எல்லாம் எம்வசமே.*

*பௌத்தமும் இந்துமத அங்கமாம்*
*சீனமும் எம்முடன் சங்கமமாம்*
*மங்கோலமும், சப்பானமும் மிஞ்சுமா?*

*வரலாற்றை திரிப்பதென்ன பஞ்சமா?*
*எகிப்தும், சுமேரியமும் இந்தியமே!*
*கிழக்கு ஆப்ரிக்காவும் தஞ்சமே!*

*பார்ப்பனரே தொலைந்த யூதரென்போம்!*
*கிறித்துவமும் இஸ்லாமும் திரிபேன்போம்!*
*உலகமே இந்துஸ்தானம் காலடியில்!*
*பார்ப்பனரே யூதரே மேல்நிலையில்!*

*செய்தியும் காட்சியும் நாங்கள் தருபவை - மக்கள்*
*சிந்தனையும் செயலும் நாங்கள்   சொல்பவை.*

*எங்களை பழித்தவர்களும் கூட்டமாய் ஒழித்தவர்களும*
*தங்களுக்குள் மடிவார்கள், தாங்களே படிவார்கள்.*

*அதுவரை ஓயமாட்டோம்*
*எதுநடந்தும் ஒழியமாட்டோம்.*

*ஒழுக்கம் என்போம் - ஆனால்*
*பொய்கள் சொல்வோம் - மாட்டினால்*
*புரட்டும் செய்வோம்.*
*உண்மையல்ல முக்கியம்.*
*பிழைப்பதே சத்தியம்!*

*காந்தியை வீரமாய் நேரடியாய் சுடுவோம்,*
*கையில், கோழையாய் "இஸ்மாயில்" எழுதுவோம்.*
*நாங்கள் அழிந்தாலும் துளுக்கரும் ஒழியட்டும்*
*புத்தி சாதுரியம், தேசபக்தி ஓங்கட்டும்!*

*கல்லறையை கோயில் என்போம்*
*குண்டுகளை அவரது என்போம்.*

*தலைவர்களை தவடையில் அறைவோம்*
*வழக்குகளால் சிறையில் அடைப்போம்.*

*நீதியே எதிர்த்தால், பாலியல் குற்றமாகும்*
*நிதிகள் யாவும், கட்சியின் சொத்துமாகும்.*

*தேர்தல் ஆணையம், கைகளில் பாவையே*
*அதிகாரிகள் யாவரும் எங்களின் சேவையே!*

*பால்தரும் பசுவைக் காப்போம் - ஆனால்*
*நிலம்உழும் காளையைக் கொல்வோம்!*
*இறைச்சி உண்போரைக் கொல்வோம் - ஆனால்*
*ஏற்றுமதியில் முதலிடம் கொள்வோம்.*

*மீனமும் அவதாரம் என்னுவோம்*
*உண்போரை கொலையும் பன்னுவோம்!*

*வரிகளால் மிரட்டி, பணத்தால் துரத்தி*
*ஆட்சிகள் பிடிப்போம், எதிர்த்தால் ஒடிப்போம்.*

*கோயில் மதிலை உடைப்போம்*
*சாமிச் சிலையும் சிதைப்போம்*
*மனிதமலத்தையும் இறைப்போம்*
*மதப்பூசல்கள் விதைப்போம்.*

*வந்தே மாதரம் என்போம்*
*ஜெய் ஶ்ரீராம் என்போம்*
*திரும்பச் சொல்லா விட்டால்*
*எட்டியெட்டி உதைப்போம்*
*கட்டிவைத்து எரிப்போம்.*

*வழிகள் எவையென கவலையில்லை*
*முடிவுகள் மட்டுமே எமதுஎல்லை.*

*உலகமே அழிந்தாலும், மனிதமே ஒழிந்தாலும்,*
*எங்கள் பணியில் ஓயப் போவதில்லை!*

## இனியொரு விதிசெய்வோம்

*இனியொரு விதிசெய்வோம் - அதை*
*எந்தநாளும் காப்போம்*

*மாதமொரு நாளேனும் - உலகம்*
*வீட்டில் அடங்கவேணும்*

*கரியமில துளைகளை - ஓசோன்*
*சரிசெய்து முடிக்கவேணும்*

*காற்றில் பறக்கும்மாசு - கொஞ்சம்*
*நீர்மண் கரையவேணும்*

*காட்டில் திரிவிலங்கு - ஒருநாள்*
*நாட்டைச் சுற்றவேணும்*

*மானும் நம்மங்கையும் - நன்றாய்*
*கலைகள் பயிலவேணும்*

*மீனும் எம்குழந்தையும் - ஒன்றாய்*
*நீச்சல் பழகவேணும்*

*கணம்மாறு வெண்சிலைகள் - வானில்*
*கண்டு களிக்கவேணும்*

*காலையின் சிவப்புமங்க - மாலை*
*மஞ்சளில் குளிக்கவேணும்*

*இரவிலோ,*

*பளிங்கு நிலவுகண்டு - யாம்*
*சிங்காரம் பண்ணவேணும்.*

## தலையில் எங்கே?

*தலையில் இருந்தா பிறந்தாய்?*
*பிதற்றாதே, உண்மையைச் சொல்!*

*தலையில் என்றால் எங்கே?*
*உதட்டில் இருந்தா? பல்லில் இருந்தா?*
*நாக்கில் இருந்தா? மூக்கில் இருந்தா?*
*கண்ணில் இருந்தா? காதில் இருந்தா?*
*புருவத்தில் இருந்தா? நெல்தியில் இருந்தா?*
*மூளையில் இருந்தா? முடுக்கில் இருந்தா?*
*மண்டையில் இருந்தா? மயிரில் இருந்தா?*

*வேதாழம் கேட்கிறேன் சொல்!*
*பதில்தெரிந்தும் சொல்லாவிட்டால்,*
*விக்கிரமாதித்தா!*
*உன்தலை சுக்குநூறாய் வெடித்துவிடும்!*

## தூற்றுவம் போற்றுவம்

*ஞாயிறு தூற்றுவர் ஞாயிறு தூற்றுவர்*
*சூரிய வெம்மை முதுகென்பில காய்தலால்!*

*திங்களைத் தூற்றுவர் திங்களைத் தூற்றுவர்*
*நிலவின் தண்மை அகவன்பில தோய்தலால்!*

*செம்புலமும் கருந்திணையும் வெடித்துச் சிதறுதே*
*தேங்கிய அணையாவும் உடைந்து சரியுதே*

*முடையின் நாற்றம் மூக்கிலும் நாக்கிலும்*
*மதவெறித் தீண்டல் நோக்கிலும் வாக்கிலும்*

*இரணத்தின் வேதமும் மரணத்தின் ஓலமும்*
*காதுகள் துளைக்க இருளுதென் நாடே!*

*அறத்தை மறந்தோம், மறத்தையும் துறந்தோம்*
*பயமதைப் போர்த்தி விதிக்குள் புதைந்தோம்.*

*எழுகாயோ என் காடே!*
*எழுப்பாயோ புது நாடே!*

*பெண்டிர் போற்றுதும் பெண்டிர் போற்றுதும்*
*பிள்ளைகள் காக்கவே பெண்டிர் எழுகவே!*

*மாணவர் போற்றுதும் மாணவர் போற்றுதும்*
*மாயைகள் போக்கி விழிக்கவே கொதிக்கவே!*

*இளைஞர் ஏற்றுதும் இளைஞர் ஏற்றுதும்*
*சேவையும் தியாகமும் காலத்தின் தேவையே!*

*எழுகிறதே என் காடு!*
*வருகிறதே புது நாடு!*

## நீக்கமற

*எங்கள் வீட்டில்*
*ஒரு பேயோ*
*ஒரு பிசாசோ*
*எல்லோரையும்*
*பிடித்தாட்டுகின்றது.*

*காலையிலும் மாலையிலும்*
*இரவிலும் நடுநிசியிலும்*
*பல்துலக்கும்போதும்*
*மலங்கழிக்கும்போதும்*
*குளிக்கும்போதும்*
*குடிக்கும்போதும்*
*படிக்கும்போதும்*
*வடிக்கும்போதும்*
*விருந்தின்போதும்*
*மருந்தின்போதும்*
*நினைவிலும்*
*கனவிலும்..*
*எப்பொழுதுதான் ஒழியுமோ தெரியவில்லை*

*“ஐயோ, உங்கள் வீட்டிலுமா டி. வி.?”*

## **செங்களப்பரணி** (குறுங்காப்பியம்)

*ஆயிரம் ஆயிரம் யானைகளும்*
*இலட்சோப இலட்சம் குதிரைகளும்*
*கோடிக் கணக்கான மாந்தர்களும்*
*வீரத்துடன் போரிட்டு மாண்ட*
*பேருலக அழிவுப் போரை*
*திருதராட்டிர மன்னனுக்கு*
*நேர்முக வருணனை செய்தான்*
*தேரோட்டி மகனான சஞ்சயன்.*

*ஆயிரம் ஆயிரமாய் மக்கள் அணிவகுக்க*
*மாதரும் மழலைகளும் அணிகளுக்கு அழகுசேர்க்க*
*களிற்று நடையால் மண்ணதிர*
*உரிமைக் குரலால் விண்ணதிர*
*காந்தியின் வழியில் நடந்திட்ட*
*ஆயுதம் இல்லாப் போராட்டத்தை,*
*இலட்சோப இலட்ச மக்கள் பார்க்கும் போதே*
*கோடானுக் கோடி மக்கள் செவிசாய்க்கும் போதே*
*தொலைநோக்குத் துப்பாக்கியால் குறிபார்த்துச் சுட்டு*
*கொன்று ஒழித்தக் கோழைகளின் கதையை*
*பாருக்கும், நல்லறிவு மாந்தருக்கும், எதிர்வரும் காலத்திற்கும்*
*பரணியாய்ப் பாட வந்தேன், சொல்லாக்கியன் நானே!*

## 1. வாழ்த்து

*குண்டு துளைத்துத் தெறித்தத் துண்டங்கள்*
*உலர்ந்துக் கருகிய கரணங்களுக்கு*
*கொதிக்கும் மண்ணும் உதிக்கும் கதிரும்*
*எதிராச் சாட்சி! நீவிர் வாழ்க!*

*குருதிச் செவ்வாறும் இறுதிக் கண்ணீரும்*
*உருகிய நிணநீரும் ஒழுகிய சிறுநீரும்*
*உறைந்த கறைக்கு பிறையே சாட்சி!*
*கரையும் வானின் திரையும் சாட்சி!*
*நீவிர் வாழ்க! நெடிது வாழ்க!*

*ஒப்பாரிக்கும் ஓலத்திற்கும் தலைவிரி கோலத்திற்கும்*
*ஒப்பாத உப்பளக் காற்றே சாட்சி!*
*அந்தரத்தின் கந்தக வாயுவும் சாட்சி!*
*நீவிரும் வாழ்க, வாழ்க வாழ்க!*

## 2. மூலதனப் பாரம்பரியம்

*எல்லா உயிரும் உடலுடன் நிலைக்கவும்*
*உள்ளம் துலங்கவும் தன்னிலை விளங்கவும்*
*உபரி விளைவை ஈந்தது இயற்கை.*
*ஆனால், அதை,*
*உழைப்பே இன்றி நியாயமும் அன்றி*
*பறித்தது பேராசை எரித்தது பொறாமை.*

*எனவே வந்தது,*
*தண்ணிக்கு காவல், மண்ணுக்கு காவல்,*
*பயிருக்கு காவல், விளைவுக்கு காவல்,*
*புள்ளுக்கு காவல், அல்லுக்கு காவல்,*
*உயிருக்கு காவல், ஊருக்கு காவல்,*
*சந்தைக் காவல், சாவடிக் காவல்,*
*பொருள் காவல், போக்குக் காவல்,*
*பொன்னிற்கு காவல், பெண்ணிற்கு காவல்,*
*காவலுக்கு காவலென அரசன் கோலோச்சினான்.*

*பகையிலாப் பொழுதும் வரிமிகையாகும் பொழுதும்*
*பசியைத் தீர்ப்பான் பிணியைத் துடைப்பான்*
*புனலைத் தடுப்பான் குளமெலாம் நிறைப்பான்*
*வளத்தைக் கூட்டுவான் செல்வத்தைப் பெருக்குவான்*
*பண்ணும் யாழும் கூத்தும் பறையும்*
*சித்திரமும் சிற்பமும் காவியமும் ஓவியமும்*
*களரியும் ஆட்டும் ஓகமும் ஞானமும்*
*நாடெலாம் தழைக்க நாளெலாம் உழைப்பான்.*

*ஓகஞான அந்தணரும் காவல்படை மன்னரும்*
*பொருள்பொன் வணிகரும் உழவுதொழில் வேளாளரும்*
*பண்யாழ் பாணரும் பறைகூத்து விறலியரும்*
*எளிமைஇனிமை குமுகம், நலிவுஇழிவு கண்டதேன்?*

*வஞ்சக அந்நியர் வந்தனர் - தமை*
*மிஞ்சிய அந்தணர் என்றனர்.*
*புரியா மொழியைக் கூட்டினர்,*

புதிராய் வேள்வியை மூட்டினர்.
பலியால் நிலைமை என்றனர்,
அவியால் இறைமை என்றனர்.
மன்னனை கைப்பாவை ஆக்கினர்,
வேண்டியதை தம்பேர் மாற்றினர்.

மண்ணாசை பொன்னாசையுடன்
பெண்ணாசையும் ஊட்டினர்.
பொறாமையும் பேராசையும் தகாதப்போர் செய்தன,
வணிகமும் உழவும் அந்நியம் ஆயின.
பண்ணும் யாழும் மண்ணுள் புதைந்தன,
பறையும் கூத்தும் எங்கோ மறைந்தன.

களப்பிரர் வந்தனர் கிழக்கும் மேற்கும்
வீண்வேள்வியைச் சாடினர் உயிர்பலியைத் தடுத்தனர்
பயிர்விளைவைக் காத்தனர் கயிர்வேதத்தார் ஓடினர்.

வந்த களப்பிரர்,
தமிழைக் கற்றனர் காப்பியம் இயற்றினர்
ஆசை அறியாமையை தருக்கமுடன் சாற்றினர்
நிலையாமை உண்மையை நெறிப்பட காட்டினர்
தன்னிலை உணர்தலே வீடென நாட்டினர்.

மன்னனுக்கும் மக்களுக்கும் பொற்காலம் - அது
ஏய்த்துப் பிழைத்தவர்க்கோ இருண்டகாலம்.

முரணில்லா சமூகம் வளர்ச்சியில் சுணங்கியது.

சுவைகண்ட பூனை சும்மா இருக்குமா?
காலம்பல காத்து கைவரிசை காட்டியது.

பூசையால் சத்தியும் புத்தியும் என்றனர்
பத்தியால் முத்தியும் சித்தியும் என்றனர்
ஓமத்தால் சுத்தியும் சாந்தியும் என்றனர்
கோயில்கள் முளைத்தன சொத்துகள் கிளைத்தன
மன்னர்கள் மக்கள் மீண்டும் இளைத்தனர்.
சமூக உபரியால் ஓர்குலம் தழைத்தது.

*புத்தப் பிக்குகள் இலங்கை ஏகினர்*
*சமணத் துறவிகள் கழுமரம் ஏறினர்.*

*போர்க்காரணம் கொடுங்கோல் என்பது இனியில்லை,*
*பழிக்குப் பழி அழிவுக்கு அழிவு*
*முடிவிலாப் போர் ஒழிவிலாப் பகை.*

*சூதும் வாதும் கூலியும் துரோகமும்*
*போர் இயந்திரத்தின் பிரியா பாகம்.*

*மக்கள் என்பதோ வரிகளின் சுரங்கம்*
*கேள்வி கேட்டால் எறிபடும் தரங்கம்.*

*கல்வி மறுக்கப்பட்டது*
*கேள்வி ஒறுக்கப்பட்டது*
*எனவே,*
*அருமை தெரியாமல் பெருமை புரியாமல்,*
*தமிழேடுகள் பெருக்கோடு ஆழிக்குள் மூழ்கின*
*தீக்குள் எரிந்து நாழிக்குள் கருகின*

*மனுவின் சாதிகளே மானுட நீதியானது*
*தீண்டாமைக் கொடுமையே வாழ்வின் நியதியானது.*

*விளைவு,*
*சொத்தால் குறுக்கில் பிரிந்த சமூகம்*
*சாதியால் நெடுக்கில் பிளக்க வீழ்ந்தது*
*குமுக இயக்கமே சிறைப்பட தாழ்ந்தது.*

*இதுவரை போராட்டம் உபரிக்கே போராட்டம்.*
*உபரியே நிலமாகும், பொன்னாகும், முதலாகும்*
*அதிகாரம் ஆகும் ஏகாதிபத்தியமும் ஆகும் - அதுவே*
*மக்களுக்கோ இன்பமும் விடுதலையும் ஆகும்.*

*வந்தான் ஆங்கிலேயன்*
*சிவப்புத் தோலன் துவக்குத் தோளன் - கண்டு*
*மயங்கித்தான் போனோம் பயந்தாளி ஆனோம்.*

*போட்டி பார்த்தான் பொறாமை பார்த்தான்*
*காட்டிக் கொடுக்கும் துரோகிகள் பார்த்தான்*

*காட்டைப் பிடித்தவன் வீட்டைப் பறித்தான்*
*கோட்டைப் பிடித்தவன் நாட்டையே பறித்தான்.*

*சட்டத்திற்கு ஒரு சட்டம் போட்டான்*
*வரிக்கு மேல் வரியாய் கேட்டான்*

*வண்டி வண்டியாய் கப்பல் கப்பலாய்*
*கண்டதை எல்லாம் சுருட்டிச் சென்றான்.*

*உபரிக்கு ஏதுகுறை, முதலுக்கு ஏதுதடை*
*இயந்திரத்திற்கு மனிதரை உதிரிகளாக்கினான்.*

*கொட்டியதோ இரத்தம் நிரம்பியதோ மூலதனம்*
*பரவியது உலகமெலாம் உறிஞ்சியது உழைப்பையெலாம்.*

*மிகையான உற்பத்தியும் விலைபோகா சந்தையும்*
*கழுத்தறுப்புப் போட்டியும் இயற்கையின் சீற்றமும்*
*உழைப்பாளர் இரத்தத்தை உபரியான மதிப்பை*
*மூலதனத்தை எல்லாம் குழிதோண்டி புதைத்தது.*

*கூட்டிக் கழித்துப் பார்த்தான் நட்டத்தை*
*போட்டியை ஒழிக்க நினைத்தான் மொத்தத்தில்.*

*மூலதன அரக்கன் மறுஅவதாரம் எடுத்தான்*
*கூட்டுக் கொள்ளைக்கு 'கம்பனி' பேர்வைத்தான்*
*பங்குகளை உலகெல்லாம் விற்றான்*
*வங்கிகளை இலஞ்சத்தால் வாங்கினான்*
*எங்கும் சென்றான் எதையும் செய்தான்.*
*அரசும் வாதியும் விரித்தனர் கம்பளம்*
*எறிந்தான் கோடிகள் இரொட்டித் துண்டுகள்*
*குழைத்தனர் குரைத்தனர் தின்றுத் தீரும்வரை.*

*மூலதனத்தின் இந்தியக் குலம் அனிலகர்வால்.*

மராட்டிய இரத்தினகிரியில் எழுப்பித்தான் கட்டிடம்
உயிருக்கு உலையென்று உருக்காலை வருமுன்பே
உணர்ந்த அம்மக்கள் உடைத்துஅதை எறிந்தனர்
ஓடஓட துரத்தினர் ஒட்டுமொத்தமாய் விரட்டினர்.

எங்கெங்கோ இடங்கேட்டான் எவரும் தரவில்லை - ஆனால்
தங்கத் தட்டில் தாரைவார்த்தாள் தமிழகி.
இலவச நிலத்துடன் விளைநிலத் தண்ணீர்
இல்லாக் குறைக்கு இலவச மின்சாரம்.

‘வளர்ச்சி’ ‘வேலைவாய்ப்பு’ என்றெல்லாம் பேச்சு
மக்களின் வரிப்பணம்தான் கொள்ளையாய் போச்சு.

எப்படி ஏனென்று இப்போது ஆரும் கேட்பதில்லை
‘பெட்டிகள்’ என்பது எல்லாரும் அறிந்ததன்றோ.

### 3. நாடு பாடியது

அடிக்கல் நாட்டும் பொழுதே
படித்துப் படித்துச் சொன்னார்கள்

அருமையான உயிர்க்கோளம் அருகாமையில் உள்ளது
வேண்டாம் அம்மா.
கிராம மக்களின் உயிருக்கு ஆபத்து
வேண்டாம் அய்யா.

கேட்டார்களா? கேட்பார்களா?

கையை நீட்டி காசை வாங்கி
வாக்கை நீங்கள் போட்டீர் தானே?
இழந்து விட்டீர் தார்மீக உரிமை
கேள்வி கேட்க அருகதை இல்லை
ஐந்து வருடங்கள் அடிப்போம் கொள்ளை.
நாங்கள் இல்லை அவர்கள் இல்லை
எவர்கள் வந்தாலும் இதுவே நில்லை.

எங்களுக்கு மட்டுமென்ன பணங்காய்ச்சி மரமுண்டா?
உங்களைப் போல்தானே நாங்களும் மனிதர்கள்
எங்களுக்கும் இலவசமாய் யார்தந்து விடுவார்கள்?

உங்களிடம் பறித்ததை உங்களுக்கே அளிக்கின்றோம்
எங்களுக்கும் கொஞ்சம் எடுத்துத்தான் கொள்கின்றோம்
ஏன்,
உங்களுக்குத்தான் சொத்து சேர்க்கத் தெரியாதே
எவ்வளவு இருந்தாலும் அழித்து விடுவீர்களே
அதனால்தான் நாங்கள் சேர்க்கின்றோம்
அதுவும் உங்களுக்காகச் சேர்க்கின்றோம்.
ஆட்சியில் அமராமல் போனால்
அடுத்த தேர்தலுக்கும் வேண்டாமா?
தண்ணீர் ஊற்ற வேண்டுமே
ஊன்சோறு ஊட்ட வேண்டுமே
கண்ணீர்விட்டு சேர்த்தச் சொத்தை - நீங்கள்
கண்ணீர்விட்டு செந்நீர்விற்று நாங்கள் சேர்த்தச் சொத்தை
தண்ணீராய் பன்னீராய் செலவழிக்க வேண்டுமே.

எனவே, அடுத்தவேளை கஞ்சிக்கு மாடாய் உழையுங்கள்
வீணாகப் போராடி சோற்றில் மண்ணள்ளிப் போடாதீர்.

அனில் அகர்வால்,
கட்டிடத்தை வேகமாக ஏற்றி விட்டான் - அமெரிக்க
ஓட்டை ஒழிசல்களை இறக்கி வைத்தான்.

சிலிநாட்டு இயந்திரங்களை மலிவாக வாங்கி - தினம்
கிலிகொள்ளச் செய்தான் பலிகொல்லச் செய்தான்.

செப்புத்தாதுக் கப்பல் தூற்றுக்குடி வந்தது
ஒப்பாத மீனவரால் கொச்சினுக்கு சென்றது.

தாதை,
வண்டிகளில் கொண்டுவந்து ஆலையை இயக்கினான்
விண்ணும் மலைத்தது மண்ணும் சிலைத்தது.

ஒருசொட்டு நீரும் ஒருபொட்டு மண்ணும்
கெடாது இயங்கும் என்றது அரசு.

ஆனால்,
கழிவுநீர் மண்ணில் பொசிந்து பரவியது
குடிநீர் குழாயில் கசிந்து நிரவியது.

வற்றாத பொருனையும் நீரற்று ஓய்ந்தது
கரையோர நிலமெல்லாம் பயிரற்றுக் காய்ந்தது.

ஆலையின் பக்கம்வர அஞ்சின பறவைகள்
துணிந்துச் சென்றவை தொப்பென்று விழுந்தவை.

புகைப்போக்கிக்குப் பொருந்தாமல் உற்பத்தி மிகுந்தது
காற்றில் கரையாமல் கந்தகவாயு இறங்கியது
கண்ணை எரித்தது புண்ணாய் அரித்தது
நுரையீரலில் நுழைந்தது நெஞ்சை அடைத்தது
மூச்சு முட்டியது வாந்தி வந்தது
ஆண்மையை அழித்தது கருவைச் சிதைத்தது
புற்றுநோயில் தூத்துக்குடிக்கு முதலிடம் அளித்தது.

எத்தனையோ ஆலைகள் இதுவரையில் இருந்தும்
எப்பொழுதும் இப்படி ஆனது இல்லையே.

புதிதாய் வந்தது செப்பு உருக்காலைதான்
அதனால்தானோ இப்படி, மக்களாய்வு செய்தனர்.

நீரில் மாசு நிலத்தில் மாசு
காற்றிலும் மாசு கொதித்தனர் மக்கள்.

பிரசுரங்கள் பரவின பிரச்சாரங்கள் பெருகின
ஊர்வலங்கள் நடந்தன பேரணிகள் தொடர்ந்தன
மனுக்கள் ஆயிரம் அரசிடம் குவிந்தன.

## *4. கோயிலும் வாயிலும் பாடியது:*

*மாசுகட்டுப்பாடு வாரியத்தை அரசாங்கம் பழித்தே*
*மோசமான விவரங்களை ஒட்டுமொத்தமாய் அழித்தது.*

*மூன்றாம் நபராய்வும் மாசுதான் என்றது – உயர்*
*நீதிமன்றமும்  மூடிவிடு என்றது.*

*உச்சமன்றம் சென்றது வேதாந்தா*
*'நாட்டுக்கு நட்டம் வீட்டுக்கு கட்டம்*
*வளர்ச்சியின் பாதையில் இழப்புகள் இயல்பே'*
*வாதம் செய்ததற்கு விவாதம் இல்லை.*

*என்ன கைமாறியது எவ்வளவு விலைபோனது*
*யாருக்கு தெரியும் அய்யனார்க்கே வெளிச்சம்.*

*'நூறுகோடி ரூபாய் வங்கியில் போட்டு*
*பாதிப்பு வந்தால் வட்டியால் நீக்கு*
*மாசுகள் வராமல் தடுத்து நிறுத்து*
*ஆலையை மீண்டும் எடுத்து நடத்து'.*

*சொன்னது உச்சநீதி இல்லைமேன் முறையீடு*
*என்னதான் செய்வார்கள் அப்பாவி மக்கள்.*

*இருமடங்கு ஆலைக்கு பலமடங்கு மாசுக்கு*
*அரசாங்கம் நிலமுடன் அனுமதியும் ஓதியது.*

*வெந்தப் புண்ணில் வேலை ஆட்டியது அரசு*
*நொந்த வாழ்வை மேலும் நோகடித்தது ஆட்சி!*

## *5. உலகு பாடியது:*

*போட்டது வெறும் முன்னூறு கோடி – இலாபம்*
*எடுப்பதோ வருடம் இருபதாயிரம் கோடி.*

எப்படி இவ்வளவு இலாபம் - எந்த
துறையிலும் இல்லாத போகம்?

இரண்டாம் உலகப் போரின் பின்பு
அமெரிக்கப் பணமே ஆயுதம் ஆனது
மற்றவர் பணங்கள் சேதாரம் ஆனது.
சொற்படி நடந்தால் கேட்டதைக் கொடுத்தால்
உங்கள் பணமும் சிறப்புடன் இருக்கும்.
எதிர்த்து நின்றால் தந்திட மறுத்தால்
உங்கள் பணமோ செல்லாக் காசு.
பின்னும் எதிர்த்தால் உயரும் கழுமரம்
சின்னா பின்னமென நாயாய் இழுபடும்.

அப்படியான,
ஆப்பிரிக்க சாம்பிய பணத்தின் நலிவால்
தோண்டி எடுத்தனர் தாதை மலிவாய்.

ஒப்பந்த ஊழியரை அடிமாட்டுக் கூலிக்கு
ஆபத்தான வேலைகளில் காப்பின்றி இறக்கினர்.
விலையான கருவியில்லை நிலையான செலவுமில்லை
இறந்தாலும் கவலையில்லை நட்டஈடு தேவையில்லை.

அரசின் கட்டுப்பாடு அறவே இல்லை
நிறுவனக் கடமையோ பேச்சுக்கும் இல்லை
கண்ணியம் மட்டும் இருக்குமா பின்னை?

சுங்கவரி கட்டவில்லை - மின்
கட்டணமும் செலுத்தவில்லை.

மண்ணும் நீரும் காற்றும் மாசாகிறதே
வீணாய் மக்கள் நோயால் சாகிறதே
கொழுக்கின்ற இலாபத்தில் கொஞ்சம் செலவிட்டு
கருவிகளால் இழப்பைத் தடுக்கலாம் அல்லவா?

அதற்கு மனசாட்சி வேண்டுமே!
பணத்தைத் தின்னும் பிணங்களுக்கு மனசாட்சியா?

*அனுமதித்த அளவுக்கு மிகையான உற்பத்தி*
*கள்ளச் சந்தைக்கு புழைக்கடையில் சென்றது.*

*கழிவோடு கழிவாக தங்கமும் பிளாட்டினமும்*
*இரவோடு இரவாக நாட்டைவிட்டே சென்றது.*

*ஏற்றுமதிக்கு ஊக்கத்தொகை அரசே அளித்தது*
*போதாதற்கு வரிக்கு விலக்கும் தெளித்தது.*

*இப்படியெலாம் சேர்ந்ததுதான் கோடானு கோடிகள்*
*மக்கள் நாமானோம் போண்டிகள் ஆண்டிகள்.*

*சூழலைக் கெடுத்து வாழ்வைச் சிதைத்து*
*மக்களை வதைத்து வருவதா வளர்ச்சி?*

*உழைப்பைச் சுரண்டி ஊழல்கள் செய்து*
*இலஞ்சம் தந்து எடுப்பதா இலாபம்?*

*வெட்கமில்லை யாருக்கும் - குற்ற*
*உணர்ச்சியில்லை எவருக்கும்!*

*அப்படியெலாம் சேர்த்து எப்படியிவர் வாழ்கின்றார்*
*கோடிகள் சேர்த்தாலும் அனாதையாய் போகின்றார்.*

*பணத்தாசைப் பைத்தியத்தால் போதை அவர்ஆகின்றார்*
*வாழாமல் வாழவும் வீடாமல் சாகின்றார்.*

*அந்தோ அறியாமை*
*அனந்தோ பேதைமை.*

### *6. பேய்கள் பாடியது:*

*தேர்தல் போர்*
*கட்சிகள் சேனைகள்*
*தலைவர்கள் மன்னர்கள்*

*வாக்குறுதிகள் எக்காளங்கள்*
*பணம் வாள்*
*பானம் பாணம்*
*இலவசம் பொறி*
*வாக்கு தற்கொலை*
*உரிமை இரத்தம்*
*மக்கள் பிணங்கள்.*

*'இவர்கள் ஆட்சிதான் அனுமதி தந்தது*
*அவர்கள் ஆட்சிதான் இயங்க வைத்தது*
*நாங்கள் வந்தால் நிறுத்தி விடுவோம்*
*எங்களுக்கு போடுங்கள் உங்களது வாக்கை.'*

*'வீரவசனமே கொள்கை*
*போராட்டமே திட்டம்*
*நடைப்பயணமே செயல்பாடு*
*மேடையே அரசியல்*
*தேர்தலே ஆட்சி*
*பணமே அதிகாரம்*
*கூட்டாளிகள் கோமாளிகள்*
*பாட்டாளிகள் ஏமாளிகள்.'*

*'தமிழே எமதுமொழி தமிழ்நாடே எமதுவழி*
*தமிழரே நாங்கள் தமிழருக்கே ஆலைகள்*
*மாசோ கொள்ளையோ தமிழர்கள் செய்யலாம்*
*மராட்டியர் பனியர் தமிழர் அல்லவே.'*

*'ஏகாதிபத்தியம் ஒழிக எதேச்சதிகாரம் ஒழிக*
*முதலாளித்துவம் ஒழிக நிலப்பிரபுத்துவம் ஒழிக*
*உலகப் பாட்டாளிகளே ஒன்று சேருங்கள்!*
*புரட்சி வெல்க! பாட்டாளிசர்வாதிகாரம் ஓங்குக!'*
*'அரசியல் அமைப்புச் சட்டத்தின் தந்தை*
*அண்ணல் அம்பேத்கார் வாழ்க வாழ்க!*
*ஒடுக்கப் பட்டோர் உரிமை காப்போம்*
*நசுக்கப் பட்டோர் நலன்கள் மீட்போம்.'*

## 7. போர் பாடியது:

*வசனங்கள் வேண்டாம் வாசகங்கள் வேண்டாம்*
*அமைதியான போராட்டத்திற்கு ஆதரவு தாருங்கள்*
*உண்ணா நோன்பிற்கு தண்ணீர் வாருங்கள்*
*முடிந்தால் அரசிடம் பேசிப் பாருங்கள்*
*இல்லையேல் வந்தவழி போய்ச் சேருங்கள்.*

*கட்சிகளை நம்பிக் கெட்டது போதும்*
*கூட இருந்தே கெடுத்தது போதும்*
*உங்களுக்கு அது அரசியல்*
*எங்களுக்கு இது உயிரியல்.*

*வாழ்வா சாவா அன்றாடம் போராட்டம்*
*விடியல் உண்டா எந்நாளும் ஏமாற்றம்.*

*எத்தனையோ மனுக்கள் தந்தோம்*
*நூதன போராட்டம் செய்தோம்*
*வாய்பேசாமலே இருந்தோம்*
*தொண்டைகிழிய கத்தினோம்*
*சட்டமன்றம் சென்றோம்*
*நீதிமன்றம் கழன்றோம்*
*பத்திரிகைகள் நாடினோம்*
*தொலைகாட்சிகள் பாடினோம்*
*என்ன பயன்? ஏது பயன்?*
*நிற்கவில்லை அந்த ஆலை*
*ஓயவில்லை எமனின் ஓலை.*

*இன்றல்லது நாளை யாராவது வருவாரென*
*இத்தனை நாட்கள் காத்து இருந்தோம்*
*நாளையோடு நூறுநாள் மாலைவரை எவருமில்லை*
*காலையில் செல்கிறோம் ஆட்சியர் அலுவலகம்*
*மனுவைத் தருவோம் நகரவே மாட்டோம்*
*மறுமொழி வரும்வரை அகலவிட மாட்டோம்.*

"அண்ணா தம்பி எல்லாரும் வாங்க
அக்கா தங்கச்சி நீங்களும் வாங்க
ஒன்றாய்ப் போவோம் என்னான்னு கேட்போம்
எத்தனை நாள்தான் ஏமாறுவது பார்ப்போம்."

ஐம்புலன் ஒருங்கிட சங்குகள் ஊதின
செம்பறை முழங்கிட மக்கள் கூடினர்.

ஒவ்வொரு அடிக்கும் ஊரே விதிர்த்தது
ஓங்கிய குரலுக்கு காற்றே சிலிர்த்தது
உயர்ந்த கைகள் விண்ணை முட்டின
சிவந்த கண்கள் செம்பை மிஞ்சின.

பொறுப்பில்லா நிறுவனங்களே ஒழிக ஒழிக
கருணையில்லா முதலாளிகளே அழிக அழிக

கழிவால் மண்ணை மலடாக்கும்
ஆலைகள் ஒழிக
குடிநீர் உறிஞ்சிப் பணமாக்கும்
ஆலைகள் அழிக
காற்றில் புற்றைப் பரப்பிடும்
ஆலைகள் ஒழிக
கடலில் நஞ்சைக் கலக்கிடும்
ஆலைகள் அழிக
வானில் பறவையைத் துரத்திடும்
ஆலைகள் ஒழிக

விரிவாக்க அனுமதியை
திரும்ப வாங்கு
தாரைவார்த்த நிலத்தையெல்லாம்
திரும்ப வாங்கு

உயிரைக் கொல்லும் உருக்காலையை
உடனேமூடு
ஊரைத் தின்னும் உருட்டாலையை
உடனேமூடு

ஏமாந்தது போதும் இனியும் மாட்டோம்
உடனே ஓடு
எழுந்து விட்டோம் விழித்து விட்டோம்
உடனே ஓடு

மக்கள் நாங்கள் ஒன்றுப் பட்டம்
என்றே பாடு
வெற்றி என்றும் எங்கள் பக்கம்
என்றே ஆடு

மக்களைக் கொன்று கொள்ளை இலாபம் ஈட்டறான்
இலாபத்தை எல்லாம் வெளிநாடு அவன் ஏத்தறான்.

எவருக்கோ சொர்க்கம்
எங்களுக்கோ நரக்கம்.

பொம்மை அரசே ஒழிக
செம்மை அரசே வருக.

அடிமை ஆட்சி ஒழிக
குடிமை ஆட்சி தருக.

காவல் அதிகாரம் அழிக
மக்கள் அதிகாரம் எழுக.

பிழைக்கும் மன்றம் கெடுக
உழைக்கும் மக்கள் எடுக.

பணம்பண்ணும் கட்சிகளே ஒழிக
பிணம்தின்னும் பட்சிகளே ஒழிக

கட்சிக்கு காசு வாங்கி
தேர்தலுக்கு தங்கம் வாங்கி
நாட்டையே கூறுபோட்டு
ஆட்டைபோடும் ஆட்சியே
அழிக அழிக அழிகவே.

போதும் போதும் போதுமே
பொறுத்தது எல்லாம் போதுமே

வேண்டும் வேண்டும் வேண்டுமே
மாற்றம் இங்கு வேண்டுமே.

மும்படை நிற்கும் எம்படை செல்லும்
இப்படை தோற்கின் எப்படை வெல்லும்

### 8. களம் பாடியது:

*"கட்சிகள் எதுவும் வரவேண்டாம் - தொலை*
*காட்சிகளும் அழவேண்டாம்."*

*"பத்திரிக்கைக்காரர் நுழைய வேண்டாம் - திரை*
*ஒத்திகைக்காரரும் குழைய வேண்டாம்."*

*"இன்றைய குட்டி முதலாளிகளே*
*நாளைய பெரிய முதலாளிகளே*
*ஊர்வலத்தில் சேராதீர்*
*உயிர்விட்டுச் சாகாதீர்."*

*"கூலிப்படையே காலிப்படையே கூட்டத்தின்ஓரம் வாருங்கள்*
*நடுவில் மட்டும் வரவேண்டாம் நாண்டுகிட்டு விழ வேண்டாம்."*

*"கத்தமட்டும் செய்றாங்க கத்திஒன்னும் காணலை*
*கம்பையும் காணலை கல்லைக்கூடக் காணலை*
*என்னத்தைப் போராட்டம் பண்றாங்க உவங்க*
*எப்படித்தான் போடறது இவங்களை நாங்க."*

*"கற்களைஎறி! திரும்ப அடிக்கிறானா பார்ப்பம்*
*நிற்காமல்தெறி! விரட்டி வராங்களா பார்ப்பம்."*

*கூலி அடிக்கிறான் கூட்டமும் அடிக்குது*
*காலி விரட்டறான் கூட்டமும் விரட்டுது*

*எங்கோ எவனோ தீயை மூட்டறான்*
*எல்லா திசையும் கூட்டம் ஓடுது*

*"அண்ணே சுட்றாங் கண்ணே - ஒன்னும்*
*பண்ணாமலே சுட்றாங் கண்ணே*
*அண்ணே..."*

*"காவல் அராஜகம் ஒழிக*
*மக்கள் ஜனநாயகம் வாழ்க*
*புரட்சி ஓங்..."*

*"செத்துச் செத்து வாழறதைவிட*
*ஒரேயடியா சாவறோம்*
*சுடுங்ங்..."*

*"நாங்க செத்தாலும் பரவால்ல*
*செம்பாலை மட்டும் ஓடா..."*

*"இதுதான் சமயம் உடனே போடு*
*பொட்டைப் பார்த்து பொட்டுன்னுப் போடு*
*பொட்டையைப் பார்த்து வாயில்லப் போடு*
*பொம்பளையைப் பார்த்து வயித்துலப் போடு*
*மண்டையில போடு தொண்டையில போடு*
*நெஞ்சிலப் போடு நினைக்காம போடு*
*திரும்பறான் ஒருத்தன் குண்டில போடு*
*எகிறான் பாரு கால்ல போடு*
*நீட்டறான் பாரு கையில போடு*
*தொலைநோக்கு துப்பாக்கில*
*குறிஉனக்கு தப்புதா?*
*நீநீ இறங்கு*
*அவன்அவன் ஏறட்டும்*
*பட்டுப்பட்டுன்னு எட்டு*
*சட்டுப்புட்டுன்னு விழனும்."*

### *9. கூழ் அடுதல்:*

*"யாருக்காக குரல் கொடுத்தாள்?*
*ஊருக்காக உலகுக்காக!*
*வாயிலேயே சுட்டாங்க,*
*பாடையில போறவங்க!*
*சுமந்தவயிறு எரியுதடா,*
*சும்மாபோக மாட்டீங்க!*
*என்ன கனவு கண்டாளோ என்மகள்,*
*கண்ணைத் துறக்காமல் போறாளே என்மகள்!*
*என்னையும் கூட்டிக்கிட்டுப் போயேண்டி,*
*புண்ணியமாய் போயிடும் வாயேண்டி!*
*உன்னை நான் பெத்ததுக்கு ஏம்மா,*
*கண்ணீர் தான் கைமாறா போம்மா."*

*"வேண்டான்னு சொன்னேனே கேட்டீங்களா - இப்ப*
*என்னாச்சு ஏதாச்சு பார்த்தீங்களா?*
*நெஞ்சிலேயே குண்டடி பட்டீங்களே,*
*பிஞ்சுரெண்டை கைகளிலே விட்டீங்களே.*
*எப்படித்தான் வளப்பேனோ நான்,*
*என்னச்சொல்லிக் கொடுப்பேனோ நான்.*
*பிள்ளைகளுக்காக என்றுதானே சொன்னீங்க,*
*இப்ப பிள்ளைகளை விட்டுஏன் போனீங்க."*

*"ஆட்சியர் அலுவலகம்?"*
*'நான்கு.'*

*"கூட்டு சாலை?"*
*'ஒன்பது.'*

*"மொத்தம்?"*
*'பதின் மூன்று.'*

*"காயம்?"*
*'நாற்பது.'*

*எண்கள்! எல்லாம்... எண்கள்*
*உயிரும் உடலும் எண்கள்*
*உருவை மறைக்கும் தூண்கள்*
*உணர்வைக் குறைக்கும் கூன்கள்*

*"குப்பை ஒன்னு இருக்கக் கூடாது*
*சிவப்புக் கறையே தெரியக் கூடாது*
*யாரும் உள்ளே வந்திடக் கூடாது*
*செய்தி வெளியே போகிடக் கூடாது."*

*'யார் ஆணை? எவன் சுட்டது?*
*எதனால் சுட்டான்? எப்படி சுட்டான்?*
*சட்டம் உண்டா?'*

*"சுட்டதைப் பற்றி தொலைக்காட்சியில் அறிந்தேன்*
*இறப்பைப் பற்றி மனத்தில் வருத்தந்தான்*
*நட்ட ஈட்டை.. நானே அறிவிப்பேன்.*

*ஆணையிட்டது,*
*அமைச்சர் நானில்லை காவலர் அவரில்லை*
*ஆட்சியர் இவருமில்லை அதிகாரிகள் யாரென்று*
*விரைவில் சொல்கின்றோம்."*

*'சுட்டது தப்பில்லை, எச்சரிக்காதது தப்பு.'*
*"உடமைக்கும் உயிருக்கும் பங்கம் வந்தால்*
*கைக்கட்டி இருக்குமா எங்கள் துறை*
*காப்பது அல்லவா காவலர் முறை."*

*"ரோமாபுரி எரிகையில்...*
*நீரோமட்டுந்தான் நரம்பிசைப்பானா?*
*தூத்துக்குடி அழுகையில்...*
*விராட்டிற்குசவால் விடமாட்டோமா?*

## *10. கடை திறப்பு:*

*"கதவைத் திறம்மா கதிர்நான் வந்திருக்கேன்*
*பசியோ பிடுங்குதம்மா உசிரை வாங்குதம்மா*

*காவல் துரத்த கடலால பறந்து போனேன்*
*காயல் இறங்கி காலால நடந்து வாரேன்*
*கதவைத் திறம்மா கதிர்நான் வந்திருக்கேன்*
*பசியோ கிள்ளுதம்மா உசிரை கொல்லுதம்மா.''*

*இன்றைக்கு எமக்கு வந்தது துவக்கு*
*நாளைக்கு உமக்கும் வருவது இருக்கு*
*யாருக்கோ எதற்கோ என்கின்ற நினைப்பு*
*நேரும்போது சிதறும் உங்களுக்கும் துளைப்பு.*

*அரசு என்பதே அடியாள் என்பது*
*மாற வேண்டும் நண்பரே!*
*மாற்ற வேண்டும் தோழரே!*

*உற்பத்தி காக்கவே உதித்தவன் மன்னன்*
*உயிரைக் காப்பதே அவனது முன்னம்*
*வரியினால் உபரியை எடுப்பது சட்டம்*
*வறியர்க்கு வகுத்துக் கொடுப்பது திட்டம்*
*பிணியின்றி மக்களைக் காத்திடவும் வேண்டும்*
*பணித்தீங்கு இல்லாமல் பார்த்திடவும் வேண்டும்*
*மண்ணை மலடாகா காத்திடல் வேண்டும்*
*தண்ணீர் கழிவாகா பார்த்திடலும் வேண்டும்*
*காற்றும் கடலும் மாசாகா வேண்டும்*
*இவைதன் கடமையென்று அரசுணர வேண்டும்.*

*மக்களுக்காக ஆட்சியா*
*ஆட்சிக்காக மக்களா*
*நூறு நாட்கள் உண்ணாதும்*
*அரசுக் கண்கள் பார்க்கல*
*ஆட்சிச் செவியும் கேக்கல*

*யாபாரம் செய்யும் கட்சிகளும்*
*காத்தை இழுத்துப் பார்க்கல*
*தண்ணியைக் குடிச்சிக் கேட்கல*

*மாசு கட்டுப்பாட்டு வாரியமும்*
*காசும் துட்டும் வாங்கிக்கிட்டு*

*ஆலையைத் தான் ஓட்டுது - தன்*
*வேலையைத் தான் காட்டுது*

*மன்றங்களும் முதலாளிகள் சொன்னபடி ஆடுது*
*பண்ணப் பெட்டிகளோ வண்டியிலதான் போகுது.*

*நிர்வாகமும் அதிகாரமும் படிச்சி என்னவாச்சு*
*தன்மானம் இல்லாமல் மனசாட்சி கொல்லாமல்*
*ஊழல்வழி போச்சு மக்கள் எதிர்ஆச்சு.*

*கொல்லாமல் இருந்து இருந்தால்*
*பாதுகாப்பும் செய்து இருந்தால் - பழைய*
*ஆலையாவது ஓடி இருக்கும்*
*வேலையாவது நடந்து இருக்கும்.*

*சாவின் பயத்தைப் போக்கி விட்டீர்*
*காயத்தின் வலியும் நிலைக்க விட்டீர் - இனி*
*ஒருபோதும் செப்பாலை ஓடாது*
*சாவென்றால் நாங்களதும் கிடையாது.*

*'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்'*
*'யாதும் ஊரே யாவரும் கேளிர்'*
*'காக்கை குருவி எங்கள் சாதி*
*காடும் மலையும் எங்கள் கூட்டம்'*
*வசனம் மட்டும் போதாது*
*வாழ்ந்தும் காட்டல் வேண்டும்*
*தடைகள் எதுவும் வந்தாலே*
*உடைத்து எறியவும் வேண்டும்.*

*செங்களத்துப் பரணியும் பண்களத்துப் பணியாம்*
*நம்மையெலாம் அரணிடும் நற்றமிழ் அணியாம்!*

## எழுகவே!

*எழுகவே - மனிதம்*
*எழுகவே!*
*விழுகவே - மதமதம்*
*விழுகவே!*

*எல்லையுமில்லை மதமுமில்லை சாதியுமில்லை எமக்கு*
*ஊர்எங்கும் உறவுளங்கும் பகையேயில்லை நமக்கு*
*பிரிமொழியில்லை பிறவினமில்லை*
*பாலிலும் வேற்றுமையில்லை*
*மனிதரும் புள்ளும் விலங்கும் புல்லும்*
*ஒருவரும் வேறென்றில்லை*
*நிலமும் காப்போம் நீரும் காப்போம்*
*இவையே உயிராதாரம்*
*காற்றும் காப்போம் வானும் காப்போம்*
*அவையே வாழ்வாதாரம்*
*எழுகவே - மனிதம்*
*எழுகவே!*
*விழுகவே - மதமதம்*
*விழுகவே!*

## மனிதநீதி

*கிறித்தவர் வந்தேறி என்றால்,*
*அவர்க்குமுன் வந்த*
*முகம்மதியர் வந்தேறி என்றால்,*
*அவர்க்கும்முன் வந்த நீங்கள் யார்?*
*வந்தேறிகள் யாராயினும் வந்தேறிகளே*

*எதற்காக எம்நாடு வந்தீர்?*
*மாடுகளுக்காக என்றால்,*
*மேய்த்துவிட்டுப் போயிருக்கலாமே!*

*இங்கேயே ஏன் தங்கினீர்கள்?*
*நாடில்லாத ஓடிகளா நீங்கள்?*
*நம்பியவரை ஏன் நாசம் செய்தீர்கள்!*

*நாங்களோ உங்கள்*
*வெள்ளைத் தோலுக்கு மயங்கினோம்,*
*விளங்காத சொல்லுக்கு தயங்கினோம்,*
*பாட்டுக்கும் கதைக்கும் கிறங்கினோம்,*
*வேள்விக்கும் பலிக்கும் நடுங்கினோம்.*

*போரென வந்திருந்தால் கொன்றிருப்போம்*
*அன்றேல் மண்ணிலாவது சாய்ந்திருப்போம்*
*கூடயிருந்து கழுத்து அறுத்து*
*எம்மையே புதைக்க வைத்தீர்!*

*எங்கள் பயிரை மேய்த்து விட்டீர்*
*எங்கள் நகரை தீய்த்து விட்டீர்*
*எங்கள் செல்வம் கொள்ளை கொண்டீர்*
*நித்தம் நித்தம் தொல்லை தந்தீர்.*

*துட்டரைக் கண்டு தூரம் சென்றோம்*
*காடுகள் மலைகள் கரந்து இருந்தோம்*
*விட்டீரா எம்மை துரத்தி வந்தீர்*
*ஒட்டும் உண்ணியாய் உறிஞ்சச் செய்தீர்*

*எங்கள் மொழியைக் கற்றீர்,*
*உங்கள் மொழியை மறைத்தீர்.*
*எங்கள் மெய்யியல் கொண்டீர்,*
*உங்கள் நிடதமென சொன்னீர்.*

*ஒருஅரசை அழித்து மறுஅரசு செய்தீர்,*
*விரும்பின பொழித்து மனுநீதி நெய்தீர்.*
*வெற்றியும், மழையும் வேள்வியால்! பீற்றினீர்,*
*வேந்தனை மக்களை வேலையாள் ஆக்கினீர்.*

*கல்வியும் வேலையும் அனைவர்க்கும் என்றதால்,*
*ஆங்கில ஆட்சியில் கலகம் செய்தீர்.*
*பெண்கள் விடுதலை சமத்துவம் என்றதால்,*
*பெரியார் சிலைகளை களங்கம் செய்றீர்*

*பிறப்பால் ஒன்றே வளர்ப்பால் மாறலாம்.*
*பறையனும் ஆரத்தில் இறையை ஓதலாம்,*
*பார்ப்பனும் சேரியில் இறைச்சி கோதலாம்,*
*அன்பும் அறிவுமே சிறப்பென கூறலாம்.*

*நீங்கள் உயர்வென நீங்களே சொல்வதா?*
*நாங்கள் தாழென நீங்கள்யார் சொல்வது?*
*நீங்கள் புனைந்தது திரித்தது மனுநீதி*
*நாங்கள் உரைப்பது ஏற்பது மனநீதி!*

*மனசாட்சி இல்லாத மனுநீதி எரிப்போம்*
*கண்ணன் சொன்னால், கீதையை தெறிப்போம்*
*வக்காலத்து வாங்கினால் வேதங்களும் கொளுத்துவோம்*
*நேர்மை நியாயம் மனிதநீதியென் றெழுப்புவோம்.*

*மனுநீதி ஒழிகவே! மனிதநீதி வாழ்கவே!*

## தெய்வங்கள் விடுதலை

*மண்ணைத் தோண்டியது நாங்கள்*
*கல்லைத் தூக்கியது நாங்கள்*
*கட்டிடம் கட்டியது நாங்கள்*
*கோபுரம் எழுப்பியது நாங்கள்*
*சிற்பம் செதுக்கியது நாங்கள்*
*சித்திரம் எழுதியது நாங்கள்*
*தெய்வக் கற்சிலை எமதே*
*உலவுப் பொற்கலை எமதே*

*ஆனால்,*
*தொழுதலும் எம்கைக்கு இல்லை ஏத்தலும் தமிழ்மொழிக்கு இல்லை*
*தமிழர்க்கும் தமிழுக்குமே தீண்டாமையா?*
*தமிழக மண்ணுக்கு நியாயமில்லையா?*
*வழக்கைத் தொடுத்தும் முடியவில்லையே!*
*நீதியின் குடுமியோ உம்கையிலே!*

*ஒருநாள்...*
*கையும் தலையொடு சாயலாமே!*
*தெய்வங்கள் விடுதலை ஆகலாமே!*

## சிறப்பு

*யூதரைப் புகழும் தோரா - அது*
*அவர்க்கு அரிது.*

*கிறித்தவர் ஏற்றும் ஆகமம் - அது*
*அவர்க்கு பெரிது.*

*முகம்மதியர் போற்றும் குரான் - அது*
*அவர்க்கு உரிது.*

*பிராமணர் பீற்றும் வேதம் - அது*
*அவர்க்கு  பரிவு.*

*பௌத்தர் ஓதும் தருமம் - அது*
*அன்பிலா அறிவு.*

*சைவ வைணவப் பாட்டும் - அது*
*யாம்பாட முறிவு.*

*எமக்கென மதமேதும் இல்லையே - அது*
*வேண்டவும் வேண்டாமே.*

*ஒருவரை ஏற்றவும் வேண்டாமே - பிறப்பால்*
*இறக்கவும் வேண்டாமே.*

*மதமின்றி சாதியமும் இறக்குமே - அப்பால்*
*சமத்துவமும் பிறக்குமே.*

*மதமற்ற மனிதரென உயர்வோம் - அன்பும்*
*அறிவும் மனிதமாம்.*

*பிறப்பு ஒக்கும் எவரெவர்க்கும் - சிறப்பு*
*மனிதர் நேயமாம்.*

## அணைத்திடுவம் வா அத்தீப்பொறியை!

*தீக்கனவு ஒன்று கண்டேன் - தோழா*
*தீக்கனவு ஒன்று கண்டேன்*

*அமைதியான இமயம் முதல் - தமிழ்*
*ஆர்ப்பரிக்கும் குமரி வரை*

*காந்தியாரின் குசரம் முதல் - குணச்*
*சந்திராரின் அருணம் வரை*

*தீபங்கள் எனக் கொண்டேன் - இரு*
*கைகள் தொழ நின்றேன்*

*தீபங்கள் இல்லை தோழா - அவை*
*தீப்பந்தங்கள் என்று கண்டேன்.*

*தீப்பந்தங்கள் மட்டும் அல்ல - தோழா*
*தீயப்பந்தங்கள் என்றும் கண்டேன்.*

*பள்ளிகள் எரியக் கண்டேன் - பள்ளி*
*வாசலும் எரியக் கண்டேன்.*

*ஆலயம் கரியக் கண்டேன் - நலச்*
*சாலையும் கரியக் கண்டேன்.*

*கோயிலின் சாம்பல் கண்டேன் - உயர்*
*கோபுரம் சாயக் கண்டேன்.*

*ஆண்களின் சடலம் கண்டேன் - உடன்*
*பெண்களின் உடலம் கண்டேன்.*

*மழலைகள் கதறக் கண்டேன் - வயது*
*முதிர்ந்தர் உதறக் கண்டேன்.*

*மண்ணெலாம் தகிக்கக் கண்டேன் - தண்*
*நீரெலாம் கொதிக்கக் கண்டேன்.*

*காற்றெலாம் புகையக் கண்டேன் - ஒளி*
*வானெலாம் இருளக் கண்டேன்.*

*பேச்செலாம் அடங்க கண்டேன் - என்*
*மூச்சும் ஒடுங்க கண்டேன்.*

*கனவிது நனவாகும் முன்பே - அன்பால் அணைத்திடுவம் வா*
*அத்தீப்பொறியை!*

## யார் நாடு?

*உன் நாடா?*
*அப்படியென்றால், என் நாடு? எம் நாடு?*
*இவர் யாவரின் நாடு?*

*எம்மை அகதியாக்கவா உரிமைகள் தந்தோம்?*
*தேசாந்திரி ஆக்கவா அதிகாரம் தந்தோம்?*

*சுவிஸ் வங்கியின் கொள்ளைப் பணத்தை*
*மீட்பீர் என்றே நம்பி இருந்தோம்.*
*மல்லை நிரவைக் கொணர்வீர் என்றே*
*இதுநாள் வரையும் காத்து இருந்தோம்.*

*அண்டை நாட்டொடு நட்பைத் தொடர்வீர்*
*அந்நியச் செலாவணி பெருக்கச் செய்வீர்*
*உலக நாட்டிடை இந்தியாவை உயர்த்துவீர்*
*என்றெல்லாம்... கனவுகள் கண்டோம்.*

*கல்வித்தரம் உயரும் உடல்நலமும் பெருகும்*
*விவசாயம் தழைக்கும் தொழில்வளம் கொழிக்கும்*
*வேலைகள் வாய்க்கும் வறுமைகள் பொய்க்கும்*
*என்றெல்லாம்...மாய்மாலம் காட்டினீர்.*

*நடந்தது என்ன? நடப்பது என்ன?*

*முதலைக்கே பணத்தைக் கடனாக தந்தீர்*
*அனாமதேய சான்றிதழால் கட்சியைப் பெருத்தீர்*
*மாநிலம் தவறாமல் குதிரைபேரம் செய்வீர்*
*சாணக்கியத் தந்திரமென மார்தட்டிக் கொள்வீர்.*

*நட்பான நாடுகளும் கசப்பென்றே ஒடுதே*
*இந்தியப் பொருளென சந்தையில் இல்லையே*
*உலகுசுற்றல் மிச்சம் பெற்றதோ அற்பம்*
*கனவுகள் எல்லாம் தவிட்டுப் பொடியோ?*

*பாரபட்சக் கல்வி, கொள்ளைநோய் அறியாமை*
*நீராண்மைக் கோளாறு, தனியார் ஆயுதங்கள்*
*வெறிகளே வேலைகள், விசுவாசமே மாலைகள்*
*காவலே களவாகும், ஆவலால் கொலையாகும்.*

*காத்தலும் இல்லை, ஈட்டலும் இல்லை*
*வகுத்தலும் இல்லை, பின், எதற்குத்தான் ஆட்சி?!*

## அவள் யாரோ?

*நீலவண்ணச் சேலையில்*
*மீனும் முத்தும் மின்னிட*
*ஒருத்தி நின்றாள்,*
*அவள் யாரோ?*

*நாளும் இருளும் கற்பழிக்க*
*பெற்றுப் பெற்றேக் கண்ணிய*
*பச்சை உடம்பினள்,*
*அவள் யாரோ?*

*கள்ளும் மதுவும் குடித்தே*
*கண்கள் இரண்டும் சிவந்தே*
*தள்ளாடி நடப்பவள்,*
*அவள் யாரோ?*

*குரைக்கும் நாய்களும் பேய்களும்*
*காமலை மஞ்சளை வீசிட*
*கூனிக் குறுகினள்,*
*அவள் யாரோ?*

*அபயம் குறிக்கும் காவியும்..*
*குரல்வளை நெரித்து நின்றால்,*
*எப்படி எழுவாள்,*
*அவள் யாரோ?*

*எங்கள் பாரத மாதோ? ஆம்*
*எங்கள் பாரத மாதே! ஐயோ*
*எங்கள் பாரத மாதா!*

## தமிழே எலாம்

*தமிழ் வெறும் பேச்சல்ல - அது*
*எமது உயிர் மூச்சு.*

*தமிழ் கீறும் எழுத்தல்ல - அது*
*அழகு தலை எழுத்து.*

*தமிழே எமக்கு தாலாட்டும் - எம்*
*தமிழும் நிலவும் சோறூட்டும்.*

*தமிழூடே எங்கள் புலனறியும் - அத்*
*தமிழாலே எங்கள் மனமறியும்.*

*தமிழால் இழைவது எண்ணம் - புது*
*சிந்தனை குழைவது திண்ணம்.*

*தமிழிலே எங்கள் கல்வி - வெல்*
*தமிழிலே எங்கள் ஆட்டம்.*

*தமிழிலே பண்ணுடைப் பாட்டு - பொன்*
*யாழிலே இசையுடைக் கூத்து.*

*தமிழிலே சதிரெனும் நாட்டியம் - வண்ணத்*
*தமிழால் சித்திரம் ஓவியம்.*

*தமிழொலி கொத்தினால் சிற்பம் - தண்ணத்*
*தாமிரம் கொட்டினால் சிலையாம்.*

*தமிழில் எழுப்புவோம் கோபுரமும் - நம்*
*தமிழிலே அடங்கும் ஓங்காரமும்.*

*தமிழோடே ஏரும் நீரும் - பல்*
*தமிழோடே களையும் விளைவும்.*

*தமிழேதான் பாலும் தேனும் - அதற்கு*
*ஈடுண்டோ பாரில் எங்கேனும்?*

*தமிழைக் கொண்டே தொழில் - பிறர்*
*தமிழைக் கற்பதுவும் எழில்.*

*சங்க இலக்கியம் படிப்போம் - உலக*
*மொழிகள் யாவினும் பெயர்ப்போம்.*

*தமிழில் அணுவும் பிளப்போம் - அதே*
*தமிழால் அண்டமும் அளப்போம்.*

## தமிழ்

*விண்ணகக் கடலிலே உணர்மனச் சிப்பியிலே*
*ஒலித்துகள் விழுந்ததே உருநிழல் எழுந்ததே.*

*நடுக்கண்ணும் திறந்தது நானஒளி பிறந்தது*
*நெஞ்சமும் பொசிந்தது நாவினை அசைத்தது*

*அசைகள் சீராக தளையுடன் ஊர்ந்தது*
*குமரிமலை பன்னடுக்கில் ப•றுளியாய் தவழ்ந்தது*
*வண்ணத் தொடையாகி மண்ணில் நடைபயின்றது.*

*மலையிலும் காட்டிலும் ஆற்றிலும் சேற்றிலும்*
*கடலிலும் வயலிலும் அடியெடுத்து வைத்தது.*

*குறிஞ்சி முல்லை மருதம் நெய்தலென*
*அகப்பூக்கள் மலர்ந்தன திக்கெலாம் மணத்தன*

*அழகும் அம்மையும் புலனொடு இயைந்தது,*
*தொன்மை இழைந்திட தேனிசை வழிந்தது.*

*அருந்திய இசையுடன் பொருந்திய புதுஇனம்*
*குழைந்த யாழினம் முழங்கிய பறையினம்*
*கொழித்தது பண்கூத் தாடியது விறலியம்.*

*வெட்சியும் கரந்தையும் வஞ்சியும் வாகையும்,*
*உழிஞையும் நொச்சியும் தும்பையும் காஞ்சியும்,*
*புறக்காட்சி ஓவியம் மறஎழுச்சி ஊக்கியம்.*

*கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும்*
*உற்றும் முற்றும் உணர்ந்த தமிழி*
*சங்கத்தில் சிலையானாள் ஐந்திரக் கலையானாள்,*
*திலகமணி யொளிவீசலானாள்! உலகெலாம் கோலோச்சலானாள்!*

## தமிழிசை

*தமிழே இசையாம் - பண்*
*இசையே தமிழாம்.*

*தமிழிசை ஓதம் - இத்*
*தரணியின் வேதம்.*

*உழையில் உளாமும் ஒலியம்*
*உயிர்ஏ காந்தம் விரியும்.*

*இளியில் பகரும் கிளியம்*
*பிரிந்துப் பருகும் புலனம்*

*விளரியில் எழுகும் தேகம்*
*தன்மம் தன்வயம் ஆகும்*

*தாரம் இழையும் புறமும்*
*தாராய் இணையும் அகமும்*

*குரலில் உறழும் சங்கம்*
*சர்வமும் அதனில் அங்கம்*

*துத்தம் என்றொரு பிளிறம்*
*தொட்டும் தொடாமல் அதிரும்*

*கைக்கிளை ஒன்றிப் பரவும்*
*மெய்யின் இன்பமாய் நிலவும்*

*தமிழே இசையாம் - பண்*
*இசையே தமிழாம்.*

*தமிழிசை ஓதம் - இத்*
*தரணியின் வேதம்.*

இசையம் முகிழும் தமிழம் மொழியம்
இயலென இயமென நடமென பொழியும்

நெடிலம் பெருமேழ்ப் பண்ணின் நீட்டம்
குறிலம் ஐஞ்சிறுப் பண்ணின் குறுக்கம்

தமிழின் உயிரே இசையின் உயிரே
அமிழ்தைக் கடையும் ஒலியின் கயிரே

இறையம் இயலம் இளையம் வண்ணம்
நிறையும் உறையும் கறையும் எண்ணம்

தன்னம் விண்மம் உணரும் திண்ணம்
எச்சம் முற்றும் உதிரும் சன்மம்.

## தாலாட்டு

*ஆராரோ ஆரிரரோ*
*ஆராரோ ஆரிரரோ*

*தொன்மை நினைவை*
*உண்மை நனவாக்க*
*புன்னகைத்து உறங்கிடுவாய் கண்ணகைத்து எழுந்திடுவாய்*

*ஆராரோ ஆரிரரோ*
*ஆராரோ ஆரிரரோ*

*பொதிகையிலே பிறந்திட்டு*
*தென்றலிலே தவழ்ந்திட்டு*
*மதுரையிலே வளர்ந்திட்டு*
*தமிழெனவே சிறந்திட்டு*

*ஆராரோ ஆரிரரோ*
*ஆராரோ ஆரிரரோ*

*இலக்கணக் காப்பியங்கள்*
*இலக்கியக் காவியங்கள்*
*தொகையும் பாட்டுமென*
*எழுதிணை ஓவியங்கள்*

*ஆராரோ ஆரிரரோ*
*ஆராரோ ஆரிரரோ*

*காலடிச் சிலம்பும்*
*கோன்முடி வீழ்த்தும்*
*அரசியல் பிழைத்தார்*
*அழலினில் சிதைவார்.*

*ஆராரோ ஆரிரரோ*
*ஆராரோ ஆரிரரோ*

தன்னலம் துறந்து
பொதுநலம் அணிந்து
பசிப்பிணி துனிக்கும்
மேகலை தெய்வம்

ஆராரோ ஆரிரரோ
ஆராரோ ஆரிரரோ

மனிதரின் சிந்தையே
இறைமை மணியென
தேனாய் இனிக்கும்
தேவரின் ஒலிப்பும்.

ஆராரோ ஆரிரரோ
ஆராரோ ஆரிரரோ

குழையும் வளையும்
எவரெவர் கண்பட்டோ
ஆழியில் கரைந்ததோ
ஊழியில் கரிந்ததோ

ஆராரோ ஆரிரரோ
ஆராரோ ஆரிரரோ

வில்லென்றும் கயலென்றும்
வேங்கைப் புலியென்றும்
இமயத்தில் கொடிநட்டார்
கல்லிலும் பொறித்திட்டார்.

ஆராரோ ஆரிரரோ
ஆராரோ ஆரிரரோ

தோரண வாயிலாம்
முத்துப் பந்தராம்
உரைநல் மன்றமாம்
திறைவெல் திண்மமாம்.

ஆராரோ ஆரிரரோ
ஆராரோ ஆரிரரோ

கண்ணகிச் சிலையும்
கங்கத்து நிலையும்
கனகத்தலைக் கல்லாம்
கங்கைநதிப் பொல்லாம்

ஆராரோ ஆரிரரோ
ஆராரோ ஆரிரரோ

காலையில் கழனியில்
பகலினில் கடலினில்
மாலையில் சோலையில்
இரவினில் நிலவினில்

ஆராரோ ஆரிரரோ
ஆராரோ ஆரிரரோ

உழையாம் குரலாம்
இளியாம் விளரியாம்
துத்தமாம் தாரமாம்
கைக்கிளை இசையாம்

ஆராரோ ஆரிரரோ
ஆராரோ ஆரிரரோ

கண்ணுள் வினைஞராம்
கல்லுள் கலைஞராம்
வண்ணச் சித்திரமாம்
எண்ணச் சிற்பமுமாம்

ஆராரோ ஆரிரரோ
ஆராரோ ஆரிரரோ

மாதங்கி யாழ்தழுவ
மாதவன் ஊழ்தவ்வ
மாலவன் குழலூத
வேலவன் கூத்தாட

ஆராரோ ஆரிரரோ
ஆராரோ ஆரிரரோ

தொன்மை நினைவை
உண்மை நனவாக்க
புன்னகைத்து உறங்கிடுவாய் கண்ணகைத்து எழுந்திடுவாய்

ஆராரோ ஆரிரரோ
ஆராரோ ஆரிரரோ

## ஐவகை மன்றம்

வேண்டும் வேண்டும் வேண்டும்
இலஞ்சி மன்றம் வேண்டும்
பசியும் பிணியும் வெறுப்பும்
பொய்யும் புறணியும் புரட்டும்
இந்திய மண்ணில் அகன்றிட
இலஞ்சி மன்றம் வேண்டும்.

வேண்டும் வேண்டும் வேண்டும்
வெள்ளிடை மன்றம் வேண்டும்
மக்கள் பணத்தைச் சுருட்டியக்
கயவர் கழுத்தை ஒடித்திட
கனவிலும் களவை ஒழித்திட
வெள்ளிடை மன்றம் வேண்டும்.

வேண்டும் வேண்டும் வேண்டும்
நெடுங்கல் மன்றம் வேண்டும்
மதவாத வஞ்சம் உண்டோர்
சாதிபேத நஞ்சம் கொண்டோர்
நெஞ்சம் தெளிந்து அமைதியுற
நெடுங்கல் மன்றம் வேண்டும்.

வேண்டும் வேண்டும் வேண்டும்
பாவை மன்றம் வேண்டும்
எளியர்க்கும் வலியர்க்கும் சமநீதி
பெண்ணுக்கும் ஆணுக்கும் ஒருநீதி
அதையும் விரைந்து அளித்திட
பாவை மன்றம் வேண்டும்.

வேண்டும் வேண்டும் வேண்டும்
சதுக்கப் பூதங்கள் வேண்டும்
பெண்கள் மோசம் செய்வோர்
மழலைகள் நாசம் செய்வார்
நையப் புடைத்து உண்ணும்
சதுக்கப் பூதங்கள் வேண்டும்.

## ஐந்திரத் தமிழ்

*இயல் ஆதி*
*இசை அனாதி*
*சதிர் அந்தாதி*
*சித்திரம் (மனம் நிறை) விண்ணகம்*
*கற்றிறம் (கணம் உறை) தன்னகம்.*

## புள்ளி

*விண்ணெல்லாம் விரவியது மனம்*
*மையமின்றிச் சுழன்றது புலம் - செய்த*
*வண்ண ஜாலங்கள் எல்லாம் மாயை*
*தன்னுள் புள்ளி கொள்ளும் வேளை.*

## பெருமை

*விணாந்திர வெளியில் இருண்மைப் பொருண்மையில்*
*அசைவிலாக் காலத்தில் அலையாகாப் புள்ளியாம்*
*ஒன்மையே தன்மையாய் ஒண்மையே அண்மையாய்*
*தண்மையே தன்மையாய் உறைமையே நிறைமையாம்!*
*நிறைமையே இறைமையாம் அருமைப் பெருமையாம்!*

## உயிர்ம அறிவு

*பரம்பொருள் விண்ணாய்*
*ஒலிரும் ஒளிரும்.*
*காந்தப் புலமென*
*'ம்'காரம்*
*கோளமெலாம் அதிரும்.*
*காலப் பிளவிலா ஒளித்தூள்*
*ஓரிடம் மறைந்ததும்*
*வேறிடம் தோன்றும்.*
*ஒருமை நிலைப்பில்*
*இருத்தலே உயிர்மம்.*
*எனவே*
*பரம்பொருள் உயிராம்.*

*பரம்பொருளே ஆற்றல்*
*ஆற்றலே இயங்கும்*
*இயக்கமே உணரும்*
*உணர்வதே அறியும்.*
*எனவே*
*பரம்பொருள் அறிவாம்.*

*பரம்பொருள் ஓரிம்அண்டமே*
*அகம்புறம் பிரிம்பிண்டமாம்.*

*அருவெளிமை கருந்துளியாய்*
*உருத்துகளாய் அணுகருவாம்.*

*அணுக்களின் இணக்கமும்*
*இணக்கத்தின் இயக்கமும்*
*உயிரதன் தோற்றமாம்.*

*உயிர்களின் இணக்கமும்*
*இணக்கத்தின் இயக்கமும்*
*உயிர்களின் தேற்றமாம்.*

மனிதனின் புலன்களும்
புலன்களின் அறிதலும்
அறிதலின் இணக்கமும்
இணக்கத்தின் இயக்கமும்
மனமெனும் ஏற்றமாம்.

வினையின் நீங்கி
புலன்கள் அடங்கி
மனமும் முடங்க
உடலின் உயிரது துலங்கும்.

அணுக்கருக் கதிரென விளங்கும்.

தானே அண்டமாய் நிறையும்
உயிர்ம அறிவாய் உறையும்.

## தூக்கம்

*உடலடங்க உயிர்துலங்க*
*ஒளிவிளங்க களிபொங்க*
*வெளிமுயங்க தூங்கலாமே!*

# அமைதிப்பெண்

*அடியும் முடியும் அறியா பயணமே*
*இடையில் நெஞ்சில் மூழ்கும் சலனமே.*

*நித்தியப் பிரணவமே சத்தியப் பிரமாணமே*
*நித்தில முகிழ்மனமே கத்தூரி புகழ்மணமே*

*சிந்தா மணியே நந்தா ஒளியே*
*தண்மைக் கதிரே தாரகைக் குதிரே*

*ஆன்மமே அண்டமாய் அகலும் அற்புதமே*
*அனைத்தும் தானாய் உணரும் கற்சிலையே*

*அன்பும் காதலும் அருளும் பொழிவதே*
*என்பும் ஆனந்த ஊற்றாய் வழிவதே*

*அசைவிலா இசையே நசையிலா பசையே*
*இமையிலா கண்ணே அமைதிப் பெண்ணே!*

## மெய்யுணர்

*நாக்கின் பேச்சை அடக்கு - சுவை*
*மொக்கின் முனையை மடக்கு.*

*தானான சுவாசம் மற - தடுத்*
*துணரும் வாசமும் துற.*

*பழமை நினைவு குலையட்டும் - கண்மூடிப்*
*புதுமைக் கனவும் கலையட்டும்.*

*கூர்ந்துகேள்! மானின் செவிமடலாய் - உள் ஓர்ந்துகேள்!*
*உடலொடு உயிராய்!*

*மேனியின் கோடிக்கண்கள் திறக்கும் - அதிர்*
*வெளியின் வீச்சொன்றே நிறைக்கும்.*

*நிலைத்து ஆழ்தல் சிறப்பு! - அதில்*
*சிதையும் ஊழின் பிறப்பு!*

## பிறப்பறம்

*நெஞ்சக் குழியின் உருவிலா உயிரம்*
*தண்டுவடச் சல்லிவேராய் பக்கவேராய் சிதறும்*
*உடலின் கொடிநாடி நரம்பெலாம் அதிரும்*
*உச்சந் தலையில் விண்ணென்றே ஒளிரும்*
*மொழிபொருள் கடந்து உலகெலாம் விரவும்*
*இடம்காலம் விடுத்து அண்டமெலாம் உதிரும்.*

## சகலமும் இறையே

*அகரமே எழுத்தெல்லாம் எழுத்தெலாம் அகரமே*
*இறைமையே உலகெல்லாம் உலகெலாம் இறைமையே*

*உடனுறை நின்றதே பொருளும் ஆற்றலே*
*இயக்கம் இன்றியே காலமும் இல்லையே*

*மௌனமே மெய்மை முழுமையே தன்மை*
*யுகமதோ பொய்மை சுகமதே நன்மை*

*சுருங்கலும் விரிதலும் உயிரின் இயற்கை*
*அடங்கலும் எழுதலும் இறையின் செயற்கை*

*வெளியெனும் நுண்மையில் துகளெனும் பொருண்மை*
*அணுவெனும் அண்டத்தில் கருவெனும் உயிர்மை*

*அணுக்கள் பலவும் அணுகியது உடலாம்*
*இயக்கும் உயிரும் கருக்களின் கருவாம்*

*உடலின் உயிரின் வெளியே உணர்வாம்*
*உணர்வே இறைமை நிலைக்கும் கலையாம்.*

*கல்லாய் சமைந்தால் சுவாசமும் குறையும்*
*சக்கரம் அமர்ந்தால் சுகமே விரையும்*

*அகரமே எழுத்தெலாம் எழுத்தெலாம் அகரமே*
*இறைமையே உலகெலாம் மனிதரும் இறைமையே!*

## பொருளும் அருளும்

*பொருளின்றி உருவில்லை*
*உருவின்றி கருவில்லை*
*கருவின்றி அருவில்லை*
*அருவின்றி ஒருமையில்லை*
*ஒருமையின்றி நிலைமையில்லை.*

*பொருளின்றி உடலுமில்லை*
*உடலின்றி உயிரில்லை*
*உயிரின்றி புலன்களில்லை*
*புலன்களின்றி மனமில்லை*
*மனமின்றி தானில்லை*
*தானின்றி தனதில்லை*
*தனதின்றி உலகில்லை*
*உலகின்றி இயக்கமில்லை*
*இயக்கமின்றி மயக்கமில்லை*
*மயக்கமின்றி துன்பமில்லை*

*ஆனால்,*
*மெய்யின் செயல்கள் ஒடுங்க*
*புலன்களின் வெள்ளம் அடங்க*
*எண்ணத்தின் ஓட்டம் நிற்கும்*
*மனமோ விழித்துப் பார்க்கும்.*

*உயிரோ மேலும் கீழும் - தண்டுவடத்*
*தூணில் ஏறும் இறங்கும்.*

*மனமே தூணாய் ஒன்ற*
*உயிரும் தூணாகி நிற்கும்.*

*மெய்யென உயிரென மனமென மூன்றும்,*
*விண்ணுக்கும் மண்ணுக்கும் ஓர்மையாகி நின்றால்,*
*பொருளும் ஆற்றலும் அருவாகி நின்றால்,*
*"முனைவன் காண்பது முதனூலாகும்".*

## தூக்கம்

*மரணம் என்னும் முடிவில்லா நாடகத்திற்கு*
*இரவுகள் ஒவ்வொன்றிலும் நடக்கும் ஒத்திகை!*

## வாழ்வு

*வீழ்வது உறுதியென்றாலும்*
*எழாமல் இருப்பதில்லை - அலை*

*இறப்பது உறுதியென்றாலும்*
*போராடாமல் நிலைப்பதில்லை - வாழ்வு.*

## உயிர்

*அழியத் துடிக்கும் உடலை*
*தற்காலிகமாக தடுக்கும் மருத்துவனா உயிர்?*

*கனக்கும் உடல் மண்ணுக்குள் மூழ்காதிருக்க*
*மிதத்தல் விதியா உயிர்?*

## வாழுங்கள், வாழவிடுங்கள்!

''நாங்களே கடவுளின் பிள்ளைகள்'' என்பதால்,
பிறர்யாவும் சாத்தானின் பிள்ளைகள் ஆவர்.

''எங்களுக்கே கடவுளின் கருணை'' என்பதால்,
பிறர்யாவும் கடவுளின் எதிரிகள் ஆவர்.

''யாங்கள் பிரம்மாவின் தலைத்தோன்றி'' என்பதால்,
பிறர்யாவும் தீண்டத் தகாதவர் ஆவர்.

''பிறவுயிர்களை மனிதன் ஆளவந்தான்'' என்பதால்
எல்லா உயிரும் கிள்ளுக்கீரை ஆகும்.

''இயற்கையே எங்கள் சுகத்திற்கு'' என்பதால்,
எல்லா வளமும் கொள்ளையில் போகும்.

உயிர்பலவும் சிதைக்கப் படுகின்றன என்பதால்,
ஒட்டுயிரும் நுண்ணுயிரும் கட்டாயம் ஏகும்.

இயல்பின் சமநிலை பாதிக்கும் என்றால்
மொத்த உயிர்களும் சீட்டுக்கட்டென சாயும்.

எனவே,
யாதும் ஊரே யாவரும் கேளிர்!
பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்!

## மனமரம்

*தலையே ஆலாம் - ஐம்*
*புலமும் பொந்தாம்.*

*எறும்புகள் ஊறும் - உமிழும்*
*பிசினும் வழியும்.*

*நாசிமலர் கமகமக்கும் - நரம்பு*
*இலைகள் சலசலக்கும்.*

*பறவைகள் கிளைகள் தாவும் - காட்சியின்*
*இரைச்சலும் இணைந்தே பாயும்.*

*கூடுகள் கொத்தாய் கட்டும் - கருங்*
*குஞ்சுகள் கழுத்தை நீட்டும்.*

*விழுதுகள் இணைய வாகும் - தமிழ்*
*பாடல்கள் ஊஞ்ச லாடும்.*

*தண்மை நிலவின் ஒளியில்,*
*விண்மீன் சிமிட்டும் ஒலியில்,*
*தன்மை நிற்கும் பொழுதில்,*
*வெளியாய் சிலைத்தல் கலையாமே!*

## தண்டுவடம்

*மண்ணுக்கும் விண்ணுக்கும் நீளும்மரம்*
*ஆணிவேரும் பக்கவேரும் ஊறும்மரம்.*

*கண்ணுக்குத் தெரியாமல் வினையாற்றும்*
*சத்தெல்லாம் உறிந்துடல் மேலேற்றும்.*

*சல்லிவேர்கள் நரம்புக் கொடிகளாகும்*
*சதையெலும்பும் அவற்றின் பிடியுளாகும்.*

*மூச்சு*
*சுருக்கத்தில் அங்கங்கள் நிலையறியும்*
*பெருக்கத்தில் இங்குமங்கும் வினைபுரியும்.*

*உற்றறியும் மேந்தோலில் முடிவேர்கள்*
*உடலெல்லாம் மின்காந்த ஒளித்தூர்கள்.*

*வாய்மூக்கு கண்செவி இலைநிலைகள்*
*தலையதற்கு ஆயிரத்தில் தாமரைகள்.*

*கால்முதல் தலைவரை அதிர்வலைகள்*
*கண்மூடி செவிமடுப்பின் மெய்ம்நிலையே.*

*உயிராதி நெஞ்சக் குகைகோர்க்கும்*
*நெற்றியொளி அதனின் இருள்போக்கும்.*

*அங்கு*
*சுவாசமது நிலைத்தால் உடல்மறையும்*
*ஆகாசமது வெள்ளத்தில் சுகம்நிறையும்.*

# இலயம்

*இறைவன்*
*நிலைஉணர்வு*

*நான்*
*எழுந்து ஓங்கி அடங்கும் துடிப்பு!*

*அதிர்வொலி நிற்க, உயிர்நிலை பேறு!*
*மரணமும் ஓலம்.*

*ஞானமே இலயமாம்.*

## கடவுள்

*கடவுள்*
*ஆழ்ந்து பரந்த உயிர்ப்பு*

*நான்*
*இருண்ட அகந்தைக் கூட்டுப் புழு!*

*மனமுள் சுருங்கி ஆழ்ந்து நிலைக்க*
*சிதறும் சிறை*
*விரியும் சிறகு*

*விண்ணின் அண்மை குமிழும் வெண்மை*
*ஒளியும் ஒலியும் ஒருங்கும் பன்மை*

*வெளியெலாம் நாதங்களின் ஜாலம்*
*நறுமண மலர்களின் வண்ணக் கோலம்*

*கானங்கூடிச் சிலிர்ப்பூட்டும் தென்றல்*
*வானம்பாடிகளின் இன்னிசைச் சங்கம்*

*மழையின் மாணிழை அருவியின் ஓங்கிசை*
*நதியின் தாழிசை கடலின் சூழிசை*

*மண்ணின் சுவாசம் உயிர்களின் நேசம்*
*கல்லின் நிலைமை வாழ்க்கைப் பாடம்*

## இறை!

*அதை எது என்பது?*
*இதை அது என்பதா? அதை அது என்பதா?*
*எதுவுமே அதாக இருக்கையில்*
*எதை அது என்றாலும் அது சரிதான்.*

*ஆனாலும், அதை அறியமுடியாது.*
*ஏனென்றால், அது அறிவது அல்ல.*

*மெய்யால் மெய்யேயாகி மெய்யாய் உணர்வது!*

*ஒன்பது ஓட்டைகளையும் அடைக்க*
*விழல் பாய்ந்த உயிர்ப்போட்டம் உள் தேங்கும்*

*எதிரொலிகள் கண்மாயைத் திறக்கப்பார்க்கும்*
*கண்காட்சிகளோ வழித்து ஓட்டப்பார்க்கும்*

*கண்ணும் காதும் கலங்காது நின்றால்*
*நினைவு அலைகள் தோற்று அடங்கும்*

*மூச்சின் ஓட்டம் பின்புலமாகும்*
*உயிரின் ஏற்றம் உள்புலனாகும்*
*உயிர்தேக்கம் மெய்யெலாம் ஊறும்*
*ஊறி ஊறி உடல் வெளியிலும் சுரக்கும்*
*சுரந்து சுரந்து விண்ணெலாம் நனைக்கும்*
*நனைந்து நனைந்து அனைத்தும் ஒன்றாகும்*
*ஒன்றித் திளைக்க காலத்துடன் இயக்கமும் நிற்கும்*
*மெய்ப்பொருள் விளங்கும்.*

## உய்வு

*மனிதமும் வரலாறும் - எங்கள்*
*புனித நூல்கள் ஆகும்*

*மூதாதை எல்லாம் - எங்கள்*
*மரபுக் குறிகள் ஆகும்*

*தாயும் தந்தையும் - எங்கள்*
*உடலும் உயிரும் ஆவர்*

*நானும் அவளும் - எங்கள்*
*குழந்தைகள் குழந்தைகள் ஆவோம்*

*விண்நரம்பு உயிரென - பிற*
*மூலங்கள் உடலென அறிவோம்*

*உயிரே மெய்யென - விரி*
*மெய்யே இறையென உணர்வோம்*

*இறையுள் உயிர்கள் - அவை*
*இருப்பில் ஒக்குமென உய்வோம்.*

## விடுதலை, சுதந்திரம்

*மலரின் விடுதலை*
*மரமிருந்து மண்ணிற்கு புறப்படும் காலம்.*
*மலரின் சுதந்திரம்*
*வெளியின் காற்றில் பயணிக்கும் தூரம்.*

*உயிரின் விடுதலை*
*உடலிருந்து விண்ணுள் வெளியாகும் கணம்.*
*உயிரின் சுதந்திரம்*
*மெய்யின் உணர்வில் களியாகும் புனம்.*

## வாழ்வு

*தூக்கம் சிறு மரணமா?*
*மரணம் பெருந் தூக்கமா?*

*கண்விழித்தலே பிறப்பா?*
*கண்மூடலும் இறப்பா?*

*வாழ்வே வெறும் இமைத்தலா?*
*நொடியில் மாத்திரை மறைதலா?*

## சிவசமாதி!

*எங்கெங்கும் உள்ளதே*
*எல்லாரிடத்தும் உள்ளது*
*எல்லாரிலும் உள்ளதே*
*உன்னிடத்தும் உள்ளது*
*உன்னுள்ளதை உணர்ந்தால்*
*இடையறாதைப் புணர்வாய்*
*அதையும் மறந்தால்*
*சிவமாய் சமைவாய்!*

## ஆகலாம்

*புத்தனாய் ஆகலாம் - சிவப்*
*பித்தனாயும் மாறலாம்*

*'ஆகலாம்', 'மாறலாம்' - அவை*
*மறந்தால் ஆகலாம்.*

## முடிவிலாப் பயணம்

*சுவாசிப்பது மூக்கும் ஈரலும் மட்டுமா?*
*சிந்திப்பது மூளையும் புறணியும் மட்டுமா?*
*உணர்வது  தோலும் மனமும் மட்டுமா?*

*தலைமுடி முதலாய் உள்ளங்கால் வரையும்,*
*நுதலும் முகமும் செவியும் கண்ணும்*
*வாயும் நாக்கும் கையும் காலும்*
*மிடற்றுக் குழியும் வயிற்றுத் துளையும்*
*மூத்திரக் குழாயும் ஆசனத்து வாயும்*
*மயிரின் கால்களும் மேனியின் துவாரங்களும்*
*உடலம் முழுதும் உள்ளிழுக்கும் வெளியேற்றும்*
*மொத்த இருப்பிலும் சுவாசம் நிகழும்*
*மொத்த உடலிலும் சிந்தனை திகழும்*
*ஒவ்வொரு செல்லிலும் சுகமது முகிழும்*
*மையக் கருங்குழி நெஞ்சம் குவியும்*
*குகையின் முடிவில் அண்டம் பயணம்!*

## அருள்

*செல்அலை வருஅலை*
*இடைவெளி ஒலிநிலை*
*கொள்கலை இறைஒளி.*

## அருட்பெருஞ்சோதி

*உடல்பொருள் சுருள்இருள்*
*மருள்அகல் மெய்நிலை*
*மனவெளி விரிஒளியே.*

## உணர்வுநிலை

*உடலோடு நிற்பதா?*
*உயிரோடு போவதா?*
*அண்டவெளியாய் நிலைப்பதா?*

## என் மகள்!

*என் மகளே! பெண் மகளே!*

*விண்ணெனை ஏராக்க உன்னன்னை வேராக்க*
*முளைத்தவளே வளர்ந்தவளே*
*முகிழ்த்தவளே மலர்ந்தவளே*

*அன்பதை  மணமாய் அனைவருக்கும் பரப்பிடுவாய்*
*துன்பதை குணமாய் தோள்தந்து துரத்திடுவாய்*

*பாடும் சங்கதியே, ஆடும் சதங்கையே*
*தீட்டும் ஓவியமே, மீட்டும் யாழினமே*

*பலிக்க பலிக்க நின்கனவு பலிக்க!*
*செழிக்க செழிக்க நில்லுலகு செழிக்க!*
*வாழ்க வாழ்க பல்லாணடு வாழியவே!*

## நண்பா!

*"அடேய் மச்சான்!"*
*இனி, யாரைக் கூப்பிடுவேன்?*

*"அடேய் ஓய்!"*
*என, யாரென்னை அழைப்பார்கள்?*

*எத்தனைக் காலம்நம் நட்படா?*
*ஆண்டுக்கு, நாற்பத்து நான்கு*
*மனத்திற்கு, யுகங்களடா!*

*புத்தா*
*ஜேகேவை உன்னால்தான் அறிந்தேன்*
*கீதையையும் நீதானே தந்தாய்.*

*பாலமதி மலையில்*
*பால்நிலா ஒளியில்*
*வழிந்தோடும் ஓடையில்*
*சிலிர்த்தோடும் தென்றலில்*
*அல்லியின் நடனத்தில்*
*சில்லியின் இசைப்பில்*
*எவ்வளவு நேரம் இருப்போம்*
*அழகின் கவிதையை இரசிப்போம்*
*ஆ, அது அந்த காலமில்லை*
*நினைவிற்கு எல்லாம் நிகழ்காலமே!*

*தவறென்றால் யாராயினும் இடித்துரைப்பாய்*
*நன்றென்றால் வாயார போற்றிடுவாய்.*
*எதையும் தேக்காத வெள்ளம் நீ*
*எவர்க்கும் உதவிடும் உள்ளம் நீ*

*எவ்வளவு சோகத்தையும்*
*பேசியே போக்கிடுவாய்*
*சிரித்து சிரித்தே*
*அனைவரையும் சிரிக்க வைப்பாய்*

*என்ன மாயமடா அது?*
*உனக்கு மட்டும் எப்படி?*

*புதுப்புது செய்திகளைக் கொணர்வாய்*
*அதிலும் புதுமையைச் சேர்ப்பாய்*
*நம்பவே முடியாததையும் நம்பவைப்பாய்*
*நாவன்மை, உன் உடன்பிறப்பு!*

*நீ கடிதம் எழுதினால்,*
*அது கவிதையாய் இருக்கும்,*
*உரைநடையில் இருந்தாலும்*
*அன்பின் இசைமையால்*
*மனதைப் பிசைந்துவிடும்.*

*மாணவர்களை விழிக்க வைக்கும் ஆசிரியராய்*
*சின்ன சொல்லதிர்ச்சியால்*
*மனதைத் திறக்க வைப்பாய்.*

*என்மனம் மிரண்டபோதும்*
*அறிவு இருண்டபோதும்*
*அருளொளியாய் வந்தவன் நீமட்டுந்தான்*
*இறையைப்போல்!*
*உன்னை நட்பாய் பெற்றது, என்வரம்*
*நீ இடையில் பிரிந்ததோ, சாபம்!*

*எத்தனையோ பேர்*
*வாழ்க்கையில் வருகிறார்கள் போகிறார்கள்*
*பெரிதாய் வலி தெரிவதில்லை.*
*ஆனால், வெகுசில நண்பரில் ஒருவன்..*
*போனால், உயிரே போனதுபோல்..*
*நெஞ்சம் அடைக்குதடா*
*தலையோ கனக்குதடா*
*கண்ணீர் பிதுங்குதடா*
*வெறுமை விழுங்குதடா*

*ஆம்*

*நட்பும் வினோதமானது!*
*காதலைப் போன்றே*
*நினைக்கவே சுகமானது*
*மறக்க முடியாத சோகமாவது!*

*ஒருவேளை..*
*திருமணம் மட்டுமல்ல,*
*நட்பும் சொர்க்கத்தில்தான் நிச்சயிக்கப்படுகின்றதோ?*

## இராமலிங்கம்

*எங்கு சென்றாய் - நீ*
*எதற்குச் சென்றாய்?*

*கதைச் சொல்லியே - நல்*
*கவிதை வல்லியே!*

*எங்கு சென்றாய் - நீ*
*எதற்குச் சென்றாய்?*

*கலங்கிய வெள்ளமல்ல சுணங்கிய வாவியல்ல*
*தெளிந்த ஊற்றாய் குளிர்ந்த ஓடையாய்*
*சொற்களின் ஓவியத்தால் கதையை வடிப்பவனே!*

*காணும் காட்சியல்ல கேட்கும் பேச்சல்ல*
*இயற்கையின் எழிலாய் இறைமையின் இயல்பாய்*
*மௌனத்தின் ஒளியால் மனவெளியைப் படிப்பவனே!*

*வாணியம்பாடி மலைக்கு கதைக்க முனைந்தாயா?*
*வானம்பாடிப் பறவையென பாடிட இணைந்தாயா?*
*புத்தனை சரவணனை நாடிட மறைந்தாயா?*

## கும்மி

*கும்மியடிங்கடி, கும்மியடிங்கடி, கும்மியடிங்கடி கும்மி !*
*சின்னப்பொண்ணுயிப்ப கன்னிப்பொண்ணுவானா*
*கும்மியடிங்கடி கும்மி !*

*நேரானப்பார்வை நொடியில் நாணித்தான் போச்சு*
*கும்மியடிங்கடி கும்மி !*

*கூரானப்பேச்சுஇப்ப கோணித்தான் போச்சு*
*கும்மியடிங்கடி கும்மி !*

*கும்மியடிங்கடி, கும்மியடிங்கடி, கும்மியடிங்கடி கும்மி !*
*சின்னப்பொண்ணுயிப்ப கன்னிப்பொண்ணுவானா*
*கும்மியடிங்கடி கும்மி !*

*பிள்ளைச்சிரிப்பெல்லாம் இப்பக்கள்ளச்சிரிப்பாச்சு*
*கும்மியடிங்கடி கும்மி !*

*உடையோடு நடையுந்தான் மாறித்தான் போச்சு*
*கும்மியடிங்கடி கும்மி !*

*கும்மியடிங்கடி, கும்மியடிங்கடி, கும்மியடிங்கடி கும்மி !*
*சின்னப்பொண்ணுயிப்ப கன்னிப்பொண்ணுவானா*
*கும்மியடிங்கடி கும்மி !*

*கண்ணெல்லாம் கனவாக, மனமெல்லாம் நினைவாக*
*எவன்தான் வந்தானோ...*
*கும்மியடிங்கடி கும்மி !*

*கண்ணன் வந்தானோ இல்லை கந்தன்தான் வந்தானோ*
*என்ன மாயமடி இவள்இப்படிமாறிப்போனாள்*
*கும்மியடிங்கடி கும்மி !*

*கும்மியடிங்கடி, கும்மியடிங்கடி, கும்மியடிங்கடி கும்மி..!*

## ஔவை, நீ என் காதலி!

*வாலைக் குமரியடி நீ - வாய்*
*திறந்தால் தமிழின் அமுதமடி.*

*மங்கை மடந்தையடி நீ - கண்*
*நகையில் சிந்தைப் புள்ளி கலங்குதடி.*

*அரிவை தெரிவையடி நீ - புன்*
*சிரிப்பில் உயிரே நொறுங்குதடி.*

*நரையும் திரையுமா நீ - என்*
*இளமைக் காதல் அழகியடி.*

*வள்ளுவக் கம்பங்களியும்*
*தொல்லியக் கொம்புத்தேனும்*
*கிட்டாது எட்டாதாயினும்*
*ஆத்திச்சூடியும் கொன்றைவேந்தனும்*
*கேப்பங் கூழாம் கன்னல் பாகாம்.*

*விதியன்று சதிசெய்யினும்*
*கதியென்று மதிபொய்யினும்*
*தாங்க தோள்தருவேன்*
*தூக்கியெறி கோலைநீ!*

## தானே பகை

*ஒருநாடு*
*அந்நாட்டுக்கு ஒருஅரசன்*
*அவ்வரசனுக்கு ஒருஅரசி*
*அவ்வரசிக்கு ஒரு ஆசை.*

*அந்தப்புரத்தில் அந்திவேளையில்*
*பாங்கிகளோடு வந்தாள்*
*தாமரைக் குளத்திலோ தண்ணிலவும் தாரகைகளும்!*
*எட்டிப் பார்த்தாள் வெட்கியது நிலவு - கண்*
*சிமிட்டிச் சிரித்தாள் சிதறின மீன்கள்.*

*அவ்வளவு அழகாகாதான் இவளுக்கு ஈடாமோ?*
*அருகில்*
*கலங்கிய நீர்போல் குழம்பிய வேந்தன்*
*தன்முகம் மறந்தான் தன்னையே பகையென்று*
*துரத்திச் சென்றான் இருளில் மறைந்தான்.*

*தீக்கனவென துடித்தது அரசி*
*நிசம்நனவென ஒலித்தது அசரீரி.*

## பாரம்

*உலகும் சட்டமும் மனதுக்கு தடையா?*
*உடலும் வயதும் உறவுக்கு முடையா?*
*அவருக்கும் இவளுக்கும் ஓர்வது பாவமா?*
*உயிருக்கும் ஊழுக்கும் ஓயாது பாரமா?*

## கூண்டுக்கிளி

தங்க கூண்டு
தொங்கும் அந்தரம்

வெள்ளிக் கிண்ணம்
கள்ளிப் பால்

மாணிக்கப் பரல்கள்
சீரணிக்காச் சுளைகள்

கொடுமையின் முடிமை - என்
கிளியின் தனிமை.

## கேசாதிபாதம் – 1

*கைகள் கன்னம் இருத்த - கண்*
*சிப்பிகள் கிறங்கிப் பொருந்த*
*முறுவல் இதழ்கள் குவிக்க - அந்த*
*மூச்சும் இதயம் நிறுத்த*
*உச்சிப் பவளம் துளிர்த்திடுமே - தோழி*
*முத்துக் குளித்து சிலிர்த்திடவா!*

## கேசாதிபாதம் -2

*விரல்கள் சீர்ப்பாய் மாறும் - கருங்*
*குழல்கள் நுழைந்து ஆழும்*
*நுனிவிரல் அழுந்தும் எழுந்தும் - மென்*
*தலையெலாம் விந்தைகள் நிகழ்ந்தும்*
*நகங்கள் வருடும் மௌனத்தில் - அந்த*
*ஓங்காரமே ஒடுங்கிப் போகும்.*

## கேசாதிபாதம் –3

*தலைக்கும் வாசம் உண்டு – மயிர்க்*
*காலுக்கும் வாசம் உண்டே! – இவள்*
*முடிக்கும் மணமது உண்டு – அதன்*
*நாளத்தில் சுவாசத்தைக்  கண்டேன் – அந்*
*நக்கீரனும் சிவனாரும் பிழையாம் – எம்*
*நுண்மை உணர்வே சரியாம்.*

## கேசாதிபாதம்–4

*நெல்மணி தேகமாம் நெற்றி – ஆங்கே*
*திறந்து மூடுமாம் நல்தீ – இளம்*
*சூட்டில் துளிர்க்குமாம் பன்னீர்– அந்*
*நீரினில் குளிக்குமாம் பிறையே*
*தாகம் எனக்கு கொடுந்தீ– சிருங்*
*காரம் கொண்டு அணைநீ!*

## கேசாதிபாதம்-5

*யாழின் நரம்புகள் அதிரவே இயலும் - இவள்*
*குழலின் இழைகளோ சதிராடவும் பயிலும்.*
*கடலின் திரைகள் நரையினைப் போக்க*
*முயலும் மீண்டும் முயலும் தோற்க - ஆயின்*
*இவளது பின்னலோ கருநாகத் திணையல்*
*முகத்தைக் காட்டாமல் வால்மட்டும் ஆட்டும்.*

## ஆசை துடிக்கின்றது. அறம் தடுக்கின்றது

*களவில் கற்பைத் தேடலும்*
*கற்பில் களவை நாடலும்*
*காதலின் இனிமை*
*காமத்தின் பழிமை!*

## எப்படி, மறக்க?

*என்னைப் பேயாய்ப் பிடித்துக் கொண்டாய்*
*எங்கெது நோக்கினும் நீதான் தெரிகின்றாய்*
*யாரைத்தான் பார்த்தாலும் நீயாய் திரிகின்றாய் - என்னையே*
*கண்ணாடி கண்டாலும் நீயங்குசிரிக்கின்றாய்.*

## உயிர்மெய்

*உடலினும் ஊனினும் தசையினும் திசுவினும்*
*உளமதை உயிருனை என்மனம் தீண்டுதே*
*உயிருதை வேண்டுதே!*

*குழலினை சங்கினை கோதாது நீவாதினினும்*
*குரலதன் தேனிசைக்கு மடல்கள் ஓங்குதே*
*காதுமடல்கள் ஏங்குதே!*

*மார்பும் மார்பும் பொருதாது குழையாதினினும்*
*நெஞ்சோடு நெஞ்சம் பொருந்தியே உருகுதே*
*அருகவே மருகுதே!*

*இடைக்கும் இடைக்கும் இணக்கம் இலாதினும்*
*துடிக்கும் வெடிக்கும் காலத்தின் நினைவலைகள்*
*அலங்கோல நனவிலிகள்!*

*கால்விரல் கால்விரல் அழுந்தாது மேலெழினும்*
*காலம்வரை காதலின் அழுத்தம் கீழாமோ*
*அடக்கம் உயிரோடோ!*

## ஓயாத கேள்வி

*வண்ண மலரின் தேனின் வாசத்தில்*
*தென்றலே சிலிர்த்தது, வண்டேனோ முழித்தது!*

*நிலவின் சிந்தொளியில் இதழ்களின் கிறக்கத்தால்*
*வானுலகே மின்னியது, வண்டேனோ உறங்கியது!*

*இரவின் சேர்ந்திசையில் மகரந்த நகைப்பொலியில்*
*மண்ணுலகே மயங்கியது, வண்டேனோ தயங்கியது!*

*வண்ணமும் வாசமும் அமிழ்தும் அழைத்தும்*
*வண்டுவர வில்லையே விரைந்தோடிப் போனதேன்?*

## வேற்றுமை உருபு

*இடையினை நூலே என்றேன் - என்*
*கழுத்தைச் சுருக்கிப் போக்கவோ?*

*இடையினை நூலே என்றேன் - என்*
*கழுத்தால் ஊஞ்சல் ஆடவே!*

*இடையினை நூலே என்றேன் - என்*
*கழுத்துக்கு மாலை ஆக்கவே!*

*இடையினை நூலே என்றேன் - என்*
*கழுத்தில் உருண்டு ஆடவே!*

*இடையினை நூலே என்றேன் - என்*
*கழுத்தது சுற்றிப் போர்த்தவே!*

*இடையினை நூலே என்றேன் - என்*
*கழுத்தின்கண் நெரித்து மூடவோ? -என்*
*கழுத்தின் கண்மறைத்து இருளவோ?*

## கண்டதும் காணவில்லை

*உன்னை நான்கண்டதும்*
*என்னையே காணவில்லை!*

*எங்கேதான் தொலைந்தேனோ?*
*யாரென்னைக் களவாடியதோ?*

*தேடிப்பார் உன்னிமையிடை*
*கண்பனியென உறைந்தேனோ?*

*ஓடிப்பார் இன்னிதழிடை*
*குறுநகையில் மறைந்தேனோ?*

*ஊதிப்பார் வலம்புரியை*
*சுழல்குழி சிக்கினேனோ?*

*கோதிப்பார் மலையிடை*
*திக்குமுக்கு ஆடுதேனோ?*

*தடவிப்பார் நூலிடையை*
*மேகலைமணி ஆனேனோ?*

*துழாவிப்பார் உன்னிதயமதை*
*கண்ணாமூச்சி விளையாட்டோ?*

*இன்றேல்,*

*பாதம்தரை தட்டிக்கேள் - உன்*
*கொலுசில் நான் ஒலிந்திருப்பேன்.*

## உவமையின் பொய்மை

*கூந்தலைக் கருமேகம் என்றேன் - ஆனால்*
*எங்கிருந்தது அவ்விழை மின்னல்?*

*நுதலை பிறைநில வென்றேன் - காதலால்*
*வளர்ந்தும் மோதலால் தேய்வதோ?*

*கண்ணைத் தண்ணில வென்றேன் - கோபம்*
*வந்தால் உலவின் வெம்மையோ?*

*கிளியின் மூக்கு என்றேன் - அதற்கு*
*எனையே குத்திக் கிழிப்பதா?*

*இதழைக் கட்டித்தேன் என்றால் - அதற்கு*
*சொல்லால் கொட்டித் துளைப்பதா?*

*கழுத்தை வலம்புரி என்றால் - அது*
*உறவுக்கே சங்கு ஊதவா?*

*தோளைத் தோளே என்றேன் - மடுத்து*
*எழுவதையும் துவள விட்டாய்!*

*இடையினை நூலே என்றேன் - என்*
*கழுத்து அறுக்கப் பாரக்குதே*

## அசல்

*உன்முகமே ஒரேஅசல் - பிற*
*முகமெலாம் குறைநகலே!*

*நுதலிருக்கும் தண்மையிலை - வில்*
*புருவமிருக்கும் கணைமையிலை*

*விழியிருக்கும் ஒளியில்லை - புன்*
*நகையிருக்கும் கொலையில்லை.*

*கன்னங்கள் மின்னுவதில்லை - மடல்*
*செவிகளோ கூச்செறிவதில்லை.*

*செவ்விதழில் தேமதுவில்லை - பரல்*
*முத்துக்கும் தன்னொளியில்லை.*

*நாவினுக்கு கூர்மையில்லை - மணம்*
*மூச்சினில் வீசவில்லை.*

*காதோரச் சுருளுக்கு - மனம்*
*சுனாமி ஆவதில்லை.*

*தோளதில் தோய்ந்து - முக்*
*காலமும் ஓய்வதில்லை.*

## மீண்ட சொர்க்கம்

*சித்திரை நிலவே சித்திர உறவே*
*ஐந்திரத் தமிழே ஐம்புலன் அமிழ்தே*
*மீண்ட சொர்க்கமே தீண்டாது போகுமோ?*
*மாண்டப் பின்னுமே மாளாது ஏக்கமோ?*

## சோதிடம்

*இன்றும் அம்முகம்*
*என்றன் கண்முன்*
*மழலையாய் மலரும்.*

*ஒருமாலை,*
*வேடிக்கையாய் சோதிடம் தெரியும் என்றேன்*
*எனக்கு எனக்கென சிறுவர்கள் வந்தனர்.*
*தனக்கும் என்றே நீயும் வந்தாய்.*

*குழந்தை வியப்பில் துள்ளும் கலைவிழி*
*கைதொட்ட மயக்கில் மின்னும் நகையொளி*
*உன்கை இரண்டும் அழுத்திச் சேர்த்து,*
*'அழகான கணவன் வருவான்' என்றதுநான்*
*எனையே இமைகள் கொட்டாது தின்றதுநீ.*

*'குழந்தை இரண்டு ஆண்பெண்' என்றேன்*
*என்னை நோக்கி உன்னையும் நோக்கினாய்.*

*ஆனால்,*
*கனவுகள் பொய்த்தன கைமீறிப் போயின*
*கைகளைப் பிடித்தவன் கைப்பிடிக்காமல் போனதேன்?*

## ஞாபகம் வருதே

*தேர்வில் தவறியதாய் கூறினாய்.*
*சான்றிதழ்*
*கூர்ந்துப் பார்த்ததில் தேறியிருந்தாய்*
*தலையில் கொட்டினேன் அறியாமைக்கு.*
*சிலையென சிரித்தாய் நீஅதற்கு.*

*மீண்டும் ஒருநாள் தவறினேன் என்றாய்*
*பார்க்காமலே கொட்டினேன் அறிந்தமைக்கு.*
*கலையென சிரித்தாய் அதற்கும்.*

*கொட்டியதற்கு சிரித்தாயா?*
*இல்லைநான் தொட்டதற்கா?*

*அன்றைய கள்ளச் சிரிப்பு*
*இன்றும் உள்ளம் கொல்லுவதேன்?*

## சுழல் கண்

*வீடே, 'அண்ணா' என்றது*
*நானோ, 'கண்ணே' என்றேன்*
*நீயோ, 'கண்ணா' என்றாய்*

*சொல் ஒலியினும் பொருண்மையே*
*முறை விளியினும் உறவே*

*பொருண்மை முரண்கள்*
*உறவின் தடமாற்றங்கள்*
*மனதையே முறிக்குமோ?*

*திரும்பிப் பார்க்கையில்*
*மனத்தின் சுழல்களில்*
*இதுவும் ஒரு கண்!*

## அணிகலை

*நிலவுக் குடம்பால் பொங்கி வழிந்தது*
*குமிழ்த்த மேகம் அடங்கி அமிழ்ந்தது*

*வெள்ளிப் பாலாடை பாரெங்கும் விரிந்தது*
*தென்றல் கோலாட வெண்ணெய் சிலிர்த்தது*

*பெண்பிறை நுதலில் பனிநெய் பொலிவது*
*அந்நிலா இந்நிலா அணிசெய் கலையாமே!*

## ஐந்திரம்

*நின்*
*விழி நோக்கு*
*குறிஞ்சி இலக்கியம்*

*மென்*
*இமை சிமிழ்ப்பு*
*முல்லை இசைப்பண்*

*புல்*
*கண் நகைப்பு*
*மருத ஓவியம்*

*கொல்*
*கடைக் கூர்ப்பு*
*பாலைக் கூத்து*

*நில்*
*நேர்ப் பார்வை*
*நெய்தல் சிற்பம்*

*உன்*
*பெயர் என்ன தமிழியோ?*
*நிலை*
*உயிர் அன்ன தமிழமோ?*

## யோகம்

*மூச்சு*
*இழுக்கையில் நீ என்னிடம் வருகின்றாய்*
*விடுகையில் நான் உன்னிடம் சேர்கின்றேன்*

*அட*
*இதென்ன பெரும் மாயம்?*
*புதிரானதே நம் காயம்!*

*ம்..காதலென்ன*
*கூடுவிட்டு கூடுபாயும் சித்தியா?*
*மண்ணிருந்து விண்ணேகும் வித்தையா?*

*அன்று சதிக்*
*காலமும் வெளியும் நமைப்பிரித்தது சோகமே*

*இன்று கவிக்*
*கோலமும் ஒளியும் இணைச்சேர்ப்பது யோகமே.*

## உயிர் எழுத்து

*நான் தமிழால் கவிதைதான் எழுதுகிறேன்.*
*நீ உணர்வால் உயிரையே எழுதுகிறாய்.*

## சூழல்

*புகையிலை நாற்றம்*
*என்*
*பேச்சிலும் மூச்சிலும்?*

*முகைநகை வாசம்*
*உன்*
*முகத்திலும் உதட்டிலும்!*

*'முத்தமே கசந்தால்?'*
*என்*
*உணர்வில் வாட்டம்.*

*'மறுநாள் வரலாம்'*
*கால்*
*பிடித்தது ஓட்டம்.*

*வந்தால்,*
*'நீயாரோ நான்யாரோ'*
*கண்*
*திசைமாறிச் சென்றது.*

*ஊடல் அறியாது*
*உளம்*
*'தோல்வி' என்றது.*

*அன்னியக் கணத்தில்*
*மனம்*
*சூனியம் ஆனது.*

*குழப்பம் கலக்கம்*
*என்*
*வாழ்வாய்ப் போனது.*

*தெளிந்துப் பார்க்க*
*யாவும்*
*முடிந்தே விட்டது.*

*திருநாள் சென்றது*
*பின்*
*ஒருநாளும் வாராதா?*
*ஒருநாளும் வா ராதா!*

## புரட்சியா? காதலா?

*புரட்சியே எனது முதல்காதல்!*
*வறுமையைப் போக்குவதும்*
*உரிமையை நாட்டுவதும்*
*சமத்துவம் கொணர்வதும்*
*சகோதரத்துவம் உணர்த்துவதுமே*
*வாழ்க்கை இலட்சியங்கள்!*

*மார்க்ஸைப் படித்து உபரிமதிப்பைக் கண்டேன்*
*லெனினைப் படித்து 'பாலின்'பெயர் கொண்டேன்*
*மாவோவால் 'கிராமப் புரட்சி' என்றேன்*

*சேவால் 'கொரில்லாப் போரெ'ன நின்றேன்*
*கட்சிகளை ஒன்றிணைக்க முனைந்தேன்*
*வீட்டைத் துறக்கவே நினைத்தேன்*
*கனவும் கற்பனையுமாய் மிதந்தேன்.*

*ஒருபக்கம் சமூக வாழ்வு*
*மறுபக்கம் தனித்த வாழ்க்கை.*

*'காதல் தோல்வியே நல்கவிதையாகும்'*
*கண்ணதாசன் ஒருபுறம்*
*'சோகத்தில்தான் இனிமையான பாடல்கள்'*
*கீட்ஸ் மறுபுறம்*
*காதலே கவிதை என்றன்றி*
*கவிதை எழுதவே காதலித்தேன்*
*தோற்கும் என்றே நினைத்தேனோ*
*தோற்க வேண்டுமெனவே விழைந்தேனோ*
*சோகத்தை வேண்டியது உள்மனம்*
*வெற்றியைத் தாங்கவில்லை என்குணம்*

*கவிதையால் காதலையே இழந்தேன்*
*இழப்பால் வாழ்வையும் தொலைத்தேன்.*
*கனவில் கலைந்து உதிர்ந்தேன்*
*கற்பனையில் கானலாய் மறைந்தேன்*

*நீ*
*என்னைக் காதலித்ததும் பாவந்தான்*
*உன்னையும் பேதலிக்க வைத்தப் பாவிநான்!*

## போதுமே போதையே!

*சந்தனக் கட்டிலா பட்டின மெத்தையா?*
*நின்றொருக் கட்டில் பட்டாலே போதுமே!*

*கோரைப் பாயா இலவம் அணையா?*
*முன்னம் தானை முள்ளும் போதையே!*

*கம்பளிப் போர்வையா தோகைத் துகிலா?*
*சிலிர்மயிர்க் கால்கள் நீவ்விரல் தனலே!*

*வானின் இரவா நிலவின் பிறையா?*
*கூந்தல் கருமை நுதலே நிறையே!*

*சிமிட்டும் மீன்களா சீண்டிடும் தென்றலா?*
*சிரிக்கும் கண்களும் சுவாசமும் கன்னலே!*

*பவழச் சிப்பியா பவள முத்தமா?*
*குவளை இதழிடை மொத்த சொத்துமே!*

*பலவின் சுளையா குளவியின் அலைவா?*
*அமிழ்தின் சுவையே அதரமே நாவே!*

*கொய்யாக் கனியா கொஞ்சும் கிளியா?*
*நெய்யாய்ப் பொலியும் கெஞ்சும் கன்னமே!*

*குடவறைச் சிற்பமா கருவறைக் கற்பமா?*
*மௌனியாய்த் துடிக்கும் மோகனச் செவ்வியே!*

*மாவின் கனியா திராட்சைப் பழமா?*
*இரண்டும் இணைந்த அழகின் அணியே!*

*இனியும் சொல்லல் கவிதைக்கு அழகா?*
*தனியாய் அள்ளல் கொள்ளல் இனிதே!*

## சும்மா ஒரு கவிதை

*காதல் சொல்கிறது:*
*எனக்கே முதலுரிமை.*

*காலம் நகைக்கிறது:*
*தவறவிட்டது நீதான்.*

*தேகம் ஏங்குகிறது:*
*அத்தாகம் அடங்கவில்லை.*

*சமூகம் ஓங்குகிறது:*
*இச்சாகும் பொழுதினிலா?*

*மனம் பொருமியது:*
*விதிதான் பிரித்தது.*

*சட்டம் உருமியது:*
*குற்றமது தெரியாதா?*

*கவிதை வரித்தது:*
*கற்பனையில் கலப்போம்.*

*கற்பனை சிரித்தது:*
*மறுபிறப்பில் சேருங்கள்.*

*பிரிந்து இறந்தோம்*
*மீண்டும் சந்தித்துப் பிறந்தோம்*

*கலக்கங்கள் தெளிந்தோம்*
*மறுபிறப்பு இதுவன்றோ?*

## இப்படியும் ஓர் கவிதை

*நாமெப்படி உறவானோம்?*
*முடியாத கனவானோம்?*

*எப்பொழுது வந்தாய் என்னுயிர் கலந்தாய்?*
*கண்விழிப் பொழுதெலாம் புன்னகை புரிந்தாய்.*

*நீயாகவே நானுணர்ந்தேன் நினைவாகவே வானுயர்ந்தேன்*
*நிலவாகவே நீவந்தாய் பனியாகவே கவிபுனைந்தேன்*

*அல்லியாய்ச் சிரித்தாய் வண்டாய்ச் சுற்றினேன்*
*கள்ளியாய்க் கண்ணால் கன்னம் ஒற்றினாய்*

*தேனெடுக்க நினைக்கையில் தென்றல்தான் வீசியது*
*புதிரான புயலொன்று நெஞ்சத்தை வீழ்த்தியது*

*கண்திறந்துப் பார்க்கையில் காணாமல் போயிருந்தேன்*
*வந்தவழி தெரியவில்லை போகும்வழி புரியவில்லை*

*காலத்தின் ஓட்டத்தில் எங்கெங்கோ போயிருந்தேன்*
*ஓயும்நேரம் கரையில் ஒதுங்க வந்தேன்*

*மீண்டும் நீயேவா? மனமறக்க வில்லையா?*
*மாண்டது எழுகிறது மணியோசை ஒலிக்கிறது.*

*வாழ்ந்தது கனவா? நினைவிது நிசமா?*
*கவிதையும் கற்பனையும் கானலில் காணலா?*

## பாலும் தேனும்

*கருங்குழல் அருள்நுதல் தவழக் கண்டேனே*
*இருள்வான் மருள்நிலவு தழுவக் காண்பேனோ?*

*வில்புருவக் கொல்லேற்றம் அலறியது என்நெஞ்சம்*
*வல்மரணக் கழுவேற்றம் இளக்காரம் என்இதழோரம்.*

*கண்கள் மலர்மாரி நனைந்த உள்ளமே*
*குளத்தின் குவளைகள் நினைக்க எண்ணுமோ?*

*சிமிட்டல் நழுவும் பார்வை கண்டபின்*
*சிறுகுட்டை மீன்கள் நீந்தல் வேண்டுமா?*

*சத்தமின்றி முத்தம் குளித்தப் பின்னமே*
*எதற்குஅப் பாலும் தேனும், வேண்டாமே!*

## மௌனச்சிலை

*கல்லாய்ச் சமைந்து*
*கொல்விழி அமைந்து*
*மெல்நகை மறந்து*
*நிற்றலும் வதையே!*

## புள்ளிக்கோடு

*உனக்காக நான் அழுகிறேன்*
*எனக்காக நீ அழுகிறாய்*
*நமக்காக யார் அழுவார்?*

*பழையதை மறக்கச் சொல்வார்*
*நடைமுறை வாழ்க்கை என்பார்*
*நினைவையே இழக்க முடியுமா?*

*கனவை மறக்கலாம்*
*கற்பனையும் துறக்கலாம்*
*பாழாய்ப்போன வாழ்வை எப்படி?*

*உனக்காக என்னை பலியிட்டேன், நீ*
*நடைப்பிணமாய் உலவுவதற்கா?*
*சோகவுருவாய் நிலவுவதற்கா?*

*தந்தைக்காக கழுத்தை நீட்டினாய்*
*தங்கைக்காக வழிதனை மாற்றினாய்*
*சிந்தை மாறாமல் போனதென்ன?*

*ஆண்டுகள் பலகழிந்தும் என்நினைவா?*
*மறவாமலே வாழ்ந்தது பெருங்கனவா?*
*விந்தைதான் உன்காதல் வரலாறு!*

*காலம்தான் நமைச் சேர்த்தது - அதே*
*காலம்தான் எமைப் பிரித்தது - மீண்டும்*
*காலம் நம்மைச் சேர்ப்பதென்ன?*

*ஏனிந்த விளையாட்டு?*
*ஆரிடுவது புதுக்கோலம்?*
*இருபுள்ளிகள் ஒருகோடாகுமா?*

## காதல் விருட்சம்

*விதைத்தோமா என்ன?*
*அமைதியில் அது ஆழ்ந்தது.*

*தண்ணீரா ஊற்றினோம்?*
*சிரிப்பின் பனித்துளியால் முளைத்தது.*

*இரவியா வளர்த்தான்?*
*கண்களின் மின்னலால் செழித்தது.*

*உரமா வைத்தோம்?*
*கவிதைகள் ஊட்டச் சத்தாயின.*

*மருந்தா அடித்தோம்?*
*ஓவியங்கள் காத்து நின்றன.*

*மலரா பறித்தோம்?*
*கனவில் அல்லவா பறந்தோம்.*

*தேனா உண்டோம்?*
*கற்பனையில் மயங்கிக் கிடந்தோம்.*

*மலர்,*
*காயாகி கனியாம் முன்பே*
*காலப் புயலால் சிதறியது.*

*திசையோடு  வழியும் மாறி*
*வாழ்க்கை வெள்ளத்தில் மடிந்தது.*

*கண்விழித்துப் பார்க்கையில்,*
*கண்டதோர் ஆலமரம்*
*விண்ணுக்கும் மண்ணுக்குமாய்*
*திசைகள் எட்டுமாய்*
*விழுதுகள் ஆயிரமாய்*
*பூக்கள் இலட்சமாய்*

*கனிகள் கோடியாய்*
*யார்கண்ணும் படாமல்*
*யார்கையும் தொடாமல்!*

*இது என்ன விந்தை?*
*உதிர்ந்தது ஒரு மலரே*
*உதித்ததோ பெருவிருட்சம்!*

## காதலுக்குமுன்

*எதுவும் பெரிதல்ல*
*எதுவும் ஒரு பொருட்டல்ல*

*அன்புசுகம் வேண்டி*
*தானேயே ஒழியும்*
*கண்ணீரைப் பொழியும் - ஏன்*
*செந்நீரையும் சொரியும்.*

*துணைநலம் ஏங்கி*
*உடலைத் துடிக்கவிடும்*
*உயிரைத் தவிக்கவிடும் - ஏன்*
*வாழ்வையும் தொலைத்துவிடும்.*

*காதலின் உயர்வுக்கு - பிற*
*எல்லாம் சிறிதே!*
*எல்லாம் குறுந்துகளே!*

## வெடிக்கும் பெயர்

*தீராத தாகங்களும்*
*விடியாத கனவுகளும்*
*முடியாத கற்பனையும்*
*வெளிப்படும் வழியின்றி*
*பெருமூச்சில் வெடிக்கும்*
*உன்றன் பெயர்!*

## அடங்காதடா

*எவ்வளவு பட்டாலும்*
*அடங்காதடா எம்காதல்.*

*உடலுக்கும் உயிருக்கும்*
*தனித்ததென நினைத்தாயா?*

*அது*
*முற்பிறப்பில் ஆழ்ந்தது*
*இப்பிறப்பில் எழுந்தது*
*உயிருடன் கலந்தது*
*உடலுடன் வளர்ந்தது*
*குருதியாய்ப் பாய்வது*
*சுவாசமாய்ப் படர்வது*
*கண்களில் மலர்ந்தது*
*காதினில் இசைத்தது*
*நாசியில் மணத்தது*
*சிரிப்பில் இனித்தது*
*மெய்யெலாம் சிலிர்த்தது*
*மனமடங்க நிலைத்தது.*

*அந்த*
*ஆனந்த இலயத்தில்*
*காலனோ கல்லெறிந்தான்*
*குழித்தது சுழன்றது*
*சூறையில் உழன்றது*
*வாழ்வின் ஓட்டத்தில்*
*வழிதிசை கழன்றது.*

*இன்று*
*காலத்தின் மறதியில்*
*நினைவாய் விழிக்குது*
*உறங்காத கனவினில்*
*உறவாட அழைக்குது.*

*அவ்வளவு பட்டும்*
*அடங்கவில்லையடா எம்காதல்!*

## முத்துச்சூழியம்

*அவள் உச்சியில்*
*முத்தந்தான் பதித்தேன்.*

*அதோ*
*மாணிக்கச் சுட்டியாய் எழும்பியது!*

*அதைப் பிணைக்கவோர்*
*முத்துச் சூழியமும் அரும்பியது!*

## தந்திர யோகம்

*புத்தகம்பல படித்தேன் புத்தம் புரியவில்லை*
*சிந்தனைசில செய்தேன் சித்தம் தெளியவில்லை*
*யோகம்பல புரிந்தேன் மோகலை அடங்கவில்லை*
*தியானம்சில செய்தும் ஞானத்தை உணரவில்லை.*

*தலைமேல் என்பார் நெற்றிப் பொட்டென்பார்*
*நாசிமுனை என்பார் மௌனநிலை என்பார்*
*நெஞ்சக்குழி என்பார் வாசித்துளை என்பார்*
*சுயமாதியிடம் என்பார் மூலாதாரம் என்பார்*
*வலதுமுலை மையப்புள்ளி இறைமைப் பாய்ச்சி என்றார்!*
*எதையும் முழுமையாய் தொடர்ந்து செய்தேனில்லை.*

*ஆனால்,*
*உச்சியில் முத்தமிட புலன்கள் நின்றன*
*நெற்றியில் முத்திட மனமே நின்றது*
*நாசிநுனி முத்தத்தில் நசையும் நசிந்தது*
*இதழ்கள் ஒத்ததில் இதயம் நிலைத்தது*
*நெஞ்சமலை முகம்பதிய நீங்கியது தாகம்*
*கஞ்சமலை கால்புதைய கரைந்தது மோகம்*
*அசைக்காமல் அசைந்திட இசைந்தது யோகம்*
*அசைத்தும் அசையாமல் உறைந்தது தியானம்*
*முயக்கத்தில் மயங்கியது வட்டமும் மையமும்*
*சமாதியில் சிலைத்தது கல்லாலக் கருவம்.*

## காதல்

*கண்ணின் காந்தப் புலத்தின் அலையே*
*தோலுள் தசையுள் அக்குள் சிக்குள்*
*வெளியில் ஒலியொடு நிமிர்ந்து இணையாட*
*நின்றது காதல் யுகாந்திரமாய்.*

## பஃறுளியாற்றுசமவெளி நாகரீகம்

*இதோ*
*இப்பெருங்கடலின்*
*ஒவ்வொரு துளியும்*
*தமிழனின் சிந்தையில்*
*ஊறிய தேன் சொட்டுகள்!*
*நுரை பொங்க வரும் அலைகள்*
*அவன் இதயத்தில்*
*சுரந்த கவிதை உணர்வுப்பால்!*
*இக்கடலும் வற்றாது*
*அலைகளும் நிற்காது*
*சிந்தும் நைலும்*
*மஞ்சளும் கருவுறுமுன்*
*பிறந்து பயின்றது பஃறுளி!*
*இது ஏன்*
*என்னை அழைக்கின்றது?*
*எனக்குள் 'வந்துவிடு வந்துவிடு'*
*என்று என்னை இழுக்கின்றதே!*
*இதை உற்று நான் நோக்கையில்*
*பாசம் பொங்குகிறதே!*
*என்னையறியாமல்*
*இதய காந்தம்*
*எதற்கோ ஏங்குகிறதே!*
*தூரத்து இசையொன்று*
*என்னை மெய்மறக்க வைக்கின்றதே!*
*மாயமான நினைவொன்று*
*நெருஞ்சியாய் தைக்கிறதே!*
*இது ஏன்? ஏன்?*
*மேருமலைப் புலவன்தான்*
*பஃறுளிக் காப்பியத்தை*
*தமிழ்மண்ணில் தவழவிட்டான்.*
*ஆ, அது எத்தனை நெஞ்சங்களில்*
*இன்ப நாடகப்பயிரை*
*விளைத்துக் களித்தது!*
*ஆம்,*

*இத்தென்றல்*
*இதே தென்றல்தான்...*
*அந்த நாகரீக இதிகாசத்தின்*
*ஒவ்வொரு காட்சிக்கும்*
*ஒரேயொரு சாட்சி!*
*அன்று, யாழ் மீட்டி*
*தமிழ்மலரின் வாசம் கூட்டி*
*ஒவ்வொரு உள்ளத்தையும்*
*சிலிர்க்க வைத்தது.*
*மற்ற நாகரீகங்கள்*
*மண்ணுக்குள் மறைந்தபோது*
*இந்த நாகரீகம் மட்டும்*
*நீருக்குள் முத்துக்குளித்தது!*
*நேற்றைய*
*புதுக்கவிதையை மறந்துவிட்ட நான்*
*காலக்காவியச் சுவடியின்*
*முதலடியைக் கற்க முயன்றேன்!*
*நினைவுகளை*
*முதுகில் பிணைத்துக் கொண்டு*
*கற்பனையை*
*செதில்களாய்ப் பிணைத்துக் கொண்டு*
*சிரசாசனம் செய்துக் கொண்டே*
*நீந்தினேன்...நீந்தினேன்...*
*நீந்திக் கொண்டே இருந்தேன்.*
*இருண்ட வானத்தில்*
*ஒற்றை நட்சத்திரம்போல்*
*கறுப்புக் குழியில்*
*ஆழ ஆழ புதைந்தேன்.*
*நிலவிய அமைதியோ*
*கல்லறையாய்*
*என்னைச் சூழ்ந்தது.*
*கண்களை இறுக்க மூடி திறந்தேன்.*
*ஆ...ஆ... அவையென்ன?*
*மின்மினிப் பூச்சிகளாய்...*
*பண்ணில் தெறிக்கும்*
*கருத்துச் சிதறல்களாய்*

*மல்லிகை வகைகளின்*
*அள்ளும் வாசமாய்...*
*சிவந்த இதழின் செம்மை ஒளியை*
*கடனாய் வாங்கி*
*நிலவாய் ஒளிரும், அவை...அவை...*
*என்*
*காதலியின் பல்வரிசைக்கு நிகராய்*
*மாதுளைப் பரல்களாய்...*
*ஆ..! இவையென்ன?*
*பொன்மணிகள் செந்நெல்மணிகள்*
*முத்துமாலைகள் சோளக்கதிர்கள,*
*வைரங்கள் வியர்வைத்துளிகள்*
*மரகதங்கள் பசுந்தளிர்கள்*
*மாணிக்கங்கள் வீரத்துளிகள்*
*இப்படி... எத்தனையோ...*
*தீபங்களாய் பொலிந்தன.*
*ஆனால்,*
*இரண்டை மட்டும் காணமுடியவில்லை*
*கூழாங்கல்லும் கண்ணீர்த்துளியும்!*
*கண்களை இறுக்கிப் பார்க்கிறேன்*
*தூரத்தில்...*
*வெள்ளி உருகி ஓடிக்கொண்டிருந்தது*
*மேரு மத்தானபோது*
*மேலே எழுந்த அமிழ்தம்*
*ஆறாக ஓடியது*
*பஃறுளி ஆறாக ஓடியது!*
*இப்போது,*
*அதன் ஊற்று மட்டும்*
*சரசுவதி நதியைப்போல்*
*சுரந்துக் கொண்டிருந்தது.*
*அள்ளிப் பருகினேன்*
*தாகம் என்பது*
*இப்படி இருக்கும் என்பதே மறந்தது.*
*உயிரோடு இருக்க வேண்டும்*
*எனும் உந்தலே வலுவிழந்தது.*
*வாழ்க்கைக் கவிதையின் சாரம்*

*என்னுளமெங்கும் நிறைந்தது.*
*வாழ்வும் வேண்டாத*
*சாவும் அண்டாத*
*சமாதி நிலையின் அமைதியில்...*
*எத்தனை யுகங்களோ...*
*ஒன்றும் உணராமல் போனேன்!*
*நதியோரத்தில்*
*சலங்கையொலி எழுப்பிய*
*பனைமரங்களின் ஓலைகளில்...*
*இன்றைய தமிழின் மழலை கொஞ்சியது!*
*இருகைகளாலும் அணைத்து முத்தமிட்டேன்!*
*கண்கள் ஆனந்தராகத்தைப் பொழிந்தது.*
*அப்பொழுதுதான்...*
*முன்பு எப்போதோ அழுதது*
*நினைவில் தெறித்தது.*
*எப்போது?*
*எதற்காக?*
*எங்கே...? எங்கே..?*
*நகரச் சந்தைக்கு சென்ற*
*கிராமத்துக் காளையைப் போல்*
*என்னுள் உணர்வுகள் உறங்க*
*தானாக விரைந்தேன்!*
*கூட்டை*
*அதில் தன் பெட்டையைக் காண*
*என் இதயப் பறவை சிறகடித்துப் பறந்தது!*
*இதோ...*
*இங்கே எங்கோதான்...*
*என்னுடைய இளமை வசந்தம் பூத்திருந்தது*
*என்ற எண்ணம் உதித்தது.*
*காலத்தையும் ஞாலத்தையும்*
*கணக்கில் கொள்ளாமல்*
*கனவுகளிலும்*
*கற்பனையிலும்*
*கவிதையிலும் வாழ்ந்துவிட்ட நாட்கள்...*
*ஓ, அவை நாட்களா?*
*யுகங்கள்!*

*முடிவிலிருந்து தொடங்கிய நாடகம்*
*புரிந்தும், புரியாத புதிராகவே இருந்தது*
*அந்த கதை.*
*அந்த விடுகதை*
*என்னுடைய அடிநெஞ்சைச் சுட்டது.*
*அதோ.. அதோ..*
*அங்கேதான் என் குடில்.*
*எதோ எதோ என் குயில்?...*
*‘கலைக்கோயில்!’*
*இதுதான் என் இல்லத்தின் பெயர்!*
*ஆனந்தமும் முகாரியும் புணர்ந்தன!*
*என் கண்ணெங்கே?*
*கண்ணின் மணியெங்கே?*
*மணியின் ஒளியெங்கே?*
*இதோ...*
*என் பாவை விளக்கு!*
*செம்பொற்சிலையே!*
*கலைகளின் ஊற்றே!*
*மங்கல மலரே! தேனே!*
*தமிழின் மணமே கண் திறடா!*
*நான்...நான்...உன் நான்*
*வந்திருக்கிறேன்!*
*என் செல்லமே!*
*ஒரு நொடி, ஒரே நொடி...*
*ஏனம்மா அப்படி பார்க்கிறாய்?*
*என்னைத் தெரியவில்லையா?*
*யாரென்று புரியவில்லையா?*
*நான்... ஓ.. நான்...நீ...*
*என் தலைவியே*
*புரிந்துவிட்டதா?*
*ஏன் இப்படி விழிக்கிறாய்?*
*ஓ, நானென்ன செய்வேன்?*
*எப்படி சொல்வேன்?*

*உன்கண்மலர்*
*வீசிய மௌன வாசத்தை*

*நான்*
*எத்தனை கவிதைப் பெட்டகத்தில்*
*பொக்கிடமாய் பூட்டி வைத்தேன்?*
*அத்தனையும் எங்கே?..எங்கே?...*
*இதோ, ஒரு ஓலைச்சுருள்.*

*ஆ...! 'அன்னப்பேடை'!*

*மண்ணரித்தாலும் செல்லரித்தாலும்*
*என் நினைவில் பூக்கும் நித்தியமல்லி!*
*இதைப் படி*
*எல்லாம் புரி...*
*ஓ...அப்படி சிரிக்காதே!*
*மாணிக்கப்பரல்கள்*
*என்முகத்தில் தெறிக்கின்றன!*
*என்குற்றம்*
*அரிவாளாய்*
*என் கழுத்தைத் தொடுகிறது!*
*ஆ...ஒரேயடியாய் சிரித்துவிடு*
*என்னை மரிக்கவிடு*
*பின் எரித்துவிடு!*
*எல்லாம் என்னுடைய குற்றமே!*
*அந்த வட்டத்தின் மையப்புள்ளியே*
*நான்தான்.*
*ஆனாலும்... நானில்லை.*
*உன்னை விட்டோட நினைக்கவில்லை!*
*என் விதியின் சதி*
*காலத்தின் கோலம்*
*தெய்வ சாபம்*
*என்னை ஆட்டிவைத்தது*
*சூன்யத்தில் தள்ளிவிட்டது.*
*கைதரவந்த உன்னையும்*
*இழுக்கப் பார்த்தேன்!*
*தேவியே*
*என்னை மன்னித்துவிடு!*
*குருடாகி, செவிடாகி*

முடமாகி
கவிதைக்கு மலடாகி
நான் துக்கத்தில் உகுத்த கண்ணீர்...
கடலின் பாதியை பங்கு கேட்கும்!
எனக்காக அல்ல!
உனக்காக...உனக்காகத்தான்
நான் அழுதேன்!
உன் பெண்மையைப் பழிக்கவில்லை நான்!
உன் மென்மையைத் தீய்த்துவிட்டப பாவி நான்!
என்னை மாய்த்துக் கொள்ளவா?
வேண்டாமா?
ஏன்?
சித்திரவதையில் காலமெல்லாம்
நான் துடிக்க
நீ இரசிக்க வேண்டுமா?
சரி இரசி!
அப்படி பார்க்காதே!
வேண்டாம்!
வெறுப்பை உன் கண்கள் பொழிந்தாலும் பொறுப்பேன்.
ஆனால், உன் அன்புப் பார்வையை
என்னால் தாங்கவே முடியவில்லை!
ஓ..அது இரக்கப் பார்வையா?
வேண்டாம், அந்த இரக்கம்!
வெறுப்பால் எரித்துவிடு
இன்றேல்
பிரியமுடன் அணைத்துவிடு!
என்னுள் உறங்கிய எரிமலை வெடித்ததால்
அருகில் நின்ற உன்னையும்
தீநாக்குகள் தீண்டிவிட்டன!

என் கண்ணீரால் கழுவி
முத்தங்களால் ஒத்தடம் தருகிறேன்
என்னை அழைத்துக்கொள்.
எரித்துக் கொல்!
அல்லது
என்னை ஏற்றுக்கொள்!

*உனக்கு ஒரு புத்துலகம் சமைக்கிறேன்*
*மூழ்கிவிட்ட மரபுகளை*
*பின்னொரு நாள் மீட்டு வருவோம்!*
*அவைகளை*
*காலனே பத்திரமாய் வைத்திருப்பான்!*
*உனக்கு நான்*
*புதுக்கவிதை உலகத்தை காட்டுகிறேன்*
*அதில் உனக்கு*
*தனியாசனத்தை நாட்டுகிறேன்!*
*பேசு! பேசு! ஒரே சொல்,*
*'உனை நேசித்தேன்', என்று.*

## கண்ணீர்க் கவிதை

*கனவுகளுக்கும் நனவுகளுக்கும்*
*எனக்கு*
*வேறுபாடு தெரிவதில்லை.*
*இறந்தகால நிகழ்ச்சிகள்*
*நினைவுகளாய் மறுபிறவிகள் எடுக்கின்றன.*
*கண்களை மூடும்போது*
*இமைத் திரையிலும்*
*திறக்கும்போது*
*நேர் எதிரிலும்*
*ருத்ர தாண்டவம் புரிகின்றன!*
*அப்போது*
*என்னுள் எழுகின்ற உணர்வுகள்*
*ஒவ்வொன்றும் நெற்றிக் கண்ணாய் மாறி*
*என்னையே எரித்துக் கொண்டிருக்கின்றன.*
*வெப்பம் தாளாமல்*
*கொப்பளங்கள் உருகி அழுகிக்*
*கரைகின்றன.*
*துரத்திவரும்*
*சிறுத்தைகளிடமிருந்து*
*குருடான கண்களுடனும்*
*செவிடான காதுகளுடனும்*
*மயான இருட்டில்*
*கல்லறை அமைதியில்*
*கால் சலித்தது தெரியாமல்*
*உடல் சோர்ந்த்து உணராமல்*
*ஏதோ*
*ஒரு முட்புதர் படுக்கையாக*
*புள்ளிமானைப் போல்*
*துள்ளிநான் விழுந்துக் கிடப்பேன்.*
*உணர்வுகளும் நினைவுகளும்*
*சூன்யத்தில் கரைந்துவிடும்.*
*ஆனால்...*
*ஆனால் அந்த கனவுகள்...*
*ஐயோ, அவை கனவா? நனவா?*

*கொந்தளிக்கும் கடலில்*
*என்னை யாரோ அமுக்குகிறார்கள்*
*மூச்சு திணறுகிறது*
*தொண்டை அடைக்கிறது*
*உடலே சுருங்கி முடங்கிப் போகிறது.*
*உயிரோ போகும் திசையறியாமல் அழுகிறது*
*மூச்சு பேச்சற்றுப் போன மூளையும் விழிக்கிறது.*
*மறுபடியும்,*
*தீப்பந்தங்கள்*
*புழுவாக இளகிய உடலை*
*தீண்டித் தீண்டி சுவை பார்க்கின்றன.*
*நெஞ்சம் விம்மி விம்மி எழ*
*மூச்சுப்பைகள் வெடிக்க எத்தனிக்க*
*இரத்த ஓட்டங்களே அமிலங்களாய்*
*ஒவ்வொரு அணுவையும் எரித்தரிக்க*
*ஒவ்வொரு அங்கமும் தனித்தனியாய் துடித்தலற*
*கண்களில் சரமாய்*
*சரம் சரமாய்*
*கண்ணீர்த்துளிகள்*
*சிறைக்கதவுகளை உடைத்துவிட்டு*
*தப்பியோடி காட்டிற்குள் அபயம் தேடும்*
*புரட்சிவாதிகளைப் போல்*
*இமைக்கதவுகளின் இடுக்கிலேயே நுழைந்து*
*கன்னங்களின் வழியே நழுவி*
*கேசக் காட்டுக்குள்*
*தலைமறைவாகிவிடும்.*
*காலையில் எழுந்து*
*கண்ணாடியைப் பார்த்தால்*
*கன்னங்களில்*
*நதிகள் பல ஊர்ந்த*
*வழித்தடங்கள்*
*பாலைக் கவிதைகளாய்*
*உப்பு வரிகளில்*
*பிரிந்துக் கிடக்கும்.*
*இந்த கவிதையைப் போல்தான்*
*அந்த கவிதைகளும்*
*எனக்கென்றே எழுதிய கவிதைகள்!*

## வாழ்நாள்

*நிகழ்ந்தனவெல்லாம்*
*நினைவுகளாகி*
*நெருஞ்சி முள்ளாய்*
*நித்தம் துளைக்கையில்,*
*‘நடந்ததெல்லாம் கனவாய் இருக்கக் கூடாதா?’*
*‘காலம் பின்சென்று மாற்றலாகாதா?’*
*என்றேங்கித் தவித்த நாட்கள் எத்தனை?*
*ஆன்மா ஒன்றின் ஆறா காயத்திற்கு*
*காரணம் என்றன் சொல்லேயென்று*
*குற்ற உணர்ச்சியால் குலைந்த நாளெத்தனை?*
*கொல்சொல் உனை எட்டவே இல்லையா?*
*எனை நேசித்ததேயில்லை என்றதெல்லாம் வெறும் கோபத்தாலா?*
*வேறாய் நினைத்தது எல்லாம் எந்தன் கற்பனைதானா?*
*எவ்வளவு காலம் கழித்து இத்தெளிவு?*
*அரிச்சந்திரன் பாவத்தை ஒருகனவில் கழித்தான்.*
*என்னுடைய பாவத்திற்கு நான் வாழ்நாளையே ஒழித்தேன்.*
*அத்தோடு உந்தன் வாழ்வையும் கெடுத்தேன்.*
*இப்பாவத்திற்கு தண்டனை மீண்டும் காத்திருக்குமோ?*

## காலதூரம்

*அன்று நித்தம் நித்தம் பார்த்தேன்*
*சலிக்கவில்லை - உன்முகம்*
*பதியவில்லை!*
*இன்று எங்கேநீ போனாலும்*
*அகலவில்லை - அமைதிமுகம்*
*மறப்பதில்லை.*
*அன்று மறந்ததாலே மீண்டும் வந்தேன்*
*இன்று மறந்தாலோ மரித்தேன் என்பேன்.*
*தூரம் என்ன தூரம்*
*காலம் என்ன காலம்*
*உறவென்ன மறந்து போகுமா - நம்*
*நினைவென்ன மறைந்துப் போகுமா?*

## நினைப்பதெல்லாம்

*நினைத்ததொன்று நடப்பதென்னவோ - நாம்*
*நினைத்ததொன்று நடப்பதென்னவோ!*
*கனவிலும் கண்டதுண்டா - தீக்*
*கற்பனையில் நினைத்ததுண்டா?*
*நீ தேடி வந்தாய்*
*நான் ஓடி நின்றேன்.*
*கைகொடுக்க வந்தேன் - நீ*
*கால்தடுக்கி விழுந்தாய்!*
*நான் செய்த பிழையா?*
*நீ செய்த தவறா?*
*யார் மீது யார் சொல்வது?*

*காலம் செய்த கோலம்*
*நேரம் செய்த கோரம்*
*யார் மீது பழி சொல்வது?*

## அழுவதா சிரிப்பதா

*என்*
*மனத்தின் நிலையறியாது*
*விழியின் மொழிபுரியாது*
*சொல்லம்பால் தைத்தாய்*
*இதயத்தை  வதைத்தாய்*

*அதைப்*
*பிடுங்கி இருந்தால்*
*நினைவுக்குருதி பீரிட்டிருக்கும்*
*வெள்ளத்தில் நானும் மூழ்கியிருப்பேன்.*

*ஆனால்,*
*அம்புடனே வாழப்பழகிக் கொண்டேன்*
*வலியுடனே சிரிக்கக் கற்றுக் கொண்டேன.*
*கண்ணீரை வியர்வையாய் துடைத்துக் கொண்டேன்.*

*அந்த*
*இதயம் சுருங்கி விட்டது*
*ஞாபகம் வரண்டு விட்டது*
*காலம் உருண்டு விட்டது.*

*அந்தியில்,*
*கவிதைக் களிம்புடன் வருகின்றாய்*
*காயம் ஆற்றிட நினைக்கின்றாய்*
*கண்ணீரால் ஒத்தடம் தருகின்றாய்*

*அழுவதா? சிரிப்பதா?*

*நினைவுத் துளியொன்று*
*காதலின் ஈரம் சுமந்து*
*இதயத்தின் ஓரத்தில்*
*மெல்ல வழிகின்றது!*

## வாழ்த்துகள்

*சித்திரை நிலவே*
*சித்திர உறவே!*

*ஐந்திரக் கலையே*
*பைந்தமிழ் நிலையே!*

*எத்தன்எனை மறந்தாய் என்றே நினைத்திருந்தேன்*
*எதனையும் மறவாமல் எப்படித்தான் இருந்தாயோ?*

*அத்தனை நாட்களும் இப்படியா இருந்தாய்?*
*கொதிக்கும் இதயமுடனும் குமுறும் எண்ணமுடனா?*

*அன்று,*
*'முப்பதாண்டு ஆகியும் வலிக்கிறது' என்றேன்*
*'நிம்மதியைக் குலைக்காதே',சலித்தான் புத்தன்.*
*அண்ணனாவது சொன்னானா அதுவும் இல்லையே!*
*அன்றேவாவது நின்காலடி வீழ்ந்து இருப்பேனே!*

*இயந்திரமாய் இருந்துவிட்டு வாழ்வைத் தொலைத்தாயோ?*
*யுகாந்திரமாய் ஊழுக்குள் யானும்உயிர் குலைவேனோ?*

*ஆனால்,*
*காவியத்தில் உனைவாழ வைப்பேன்*
*காலமெலாம் தமிழ்நினைக்க வைப்பேன்*

*வேறென்ன சொல்வேன் நீபிறந்த நாளில்?*
*கண்ணீர் வாழ்த்துகள் பாதமலர் நனைக்கட்டும்!*

## கண்ணுக்குள் கண்

*உன்றன் கண்மணியில்*
*ஊஞ்சலாடும் என்நிழல்.*

*அந்நிழலின் கருவிழியில்*
*சதிராடும்*
*உன் கண்ணகையும்*
*செம் புன்னகையும்*

## விபத்து

*மறுபடியும் ஒரு விபத்து*
*மீண்டும் உயிர் பிழைத்தேன்*

*அன்று தமிழினுக்கே*
*இன்று கலையினுக்கோ?*

## என்ன கொடுமை இது?

எனக்கு நீவேண்டும்
இழந்ததைக் கண்டெடுக்க.

உனக்கு நான்வேண்டும்
தள்ளியவனே புல்லிவிட.

எனக்கு நீவேண்டும்
என்னைச் சரிபார்க்க.

உனக்கு நான்வேண்டும்
வஞ்சப் பழிதீர்க்க.

நினைவழுத்தம் வெளியேற
வாழ்நாளே போதாதே.

தொட்ட மாத்திரத்தில்
உலகே மறந்திட்டால்..

கண்ணன் இராதையென
கானகம் மறைவோமா?

முருகன் வள்ளியென
உருமாறி உறைவோமா?

என்னக் கொடுமையிது
எப்படித்தான் தீருமது?

## வெற்றிடம்

*காலத்தின் வெற்றிடம்*
*இதயத்தின் புற்றுநோய்!*

## உறக்கமின்மை

*ஆசையின் தாக்கம்*
*ஊனுயிர் ஏக்கம்*
*ஒவ்வொரு அணுவிலும்*
*ஒவ்வொரு கணுவிலும்*
*கிறக்கம் பிறந்தது*
*உறக்கம் மறந்தது.*

## வாழ்வே சாவாய்

*என்மனம் அரும்பாய் கண்மூடி இருந்தது*
*இழைந்த  தென்றலில் இசைத்துநீ வந்தாய்*
*பண்கள் பாடினாய் கூத்தும் ஆடினாய்*
*மண்ணையும் விண்ணையும் சொல்லால் காட்டினாய்*
*உலகின் அழகைக் காண்ஆவல் ஊட்டினாய்*

*மலர்ந்திட மணமும் மேலே எழுந்தது*
*பருகிட தேனும் சுரந்து முகிழ்த்தது*
*குளத்தின் ஆடியில் நாண்முகம் கண்டேன்*
*அழகின் சிரிப்பில் ஆனந்தம் கொண்டேன்*

*பக்கம் வருவாய் மெல்லத் தொடுவாய்*
*உச்சி முகர்ந்து உண்டுநீ மகிழ்வாய்*
*என்றெல்லாம் காத்திருந்தேன்*
*கண்திறந்தே மயங்கிநின்றேன்*

*என்னாயிற்று? ஏதாயிற்று? ஒன்றும் புரியவில்லை*
*ஆளையும் காணோம் அரவமும் காணோம்*
*தன்மானம் வெட்கியது தண்ணிதழ் வெம்பியது*
*மலர்ந்தும் மலராமல் உதிர்ந்து மண்ணானது*

*எந்த பாவம்? என்ன தவறு?*
*தீக்கனவா? பேய்நனவா?*
*இதயம் வெடித்தது எல்லாம் முடிந்தது*
*வாழ்வே சாவாய் சாவே வாழ்வாய்!*

## கொலுசு

*காணாமலே சாவேனோ என்றிருந்தேன் - உன்*
*கொலுசோடே அடங்கும் என்னுயிரும் சூளுரைத்தேன்.*

*எல்லாம் மாறியிருக்கும் தீநினைவு ஆறியிருக்கும்*
*என்றுதான் நானும் நினைத்தேன்.*
*தொடாத குறை சொல்லின் கறை*
*தொடர்ந்து வந்ததை என்சொல்ல?*

*காலம் மீளுமா பார்ப்போம்*
*இருள்நினைவை ஒளிநனவாக்கி மறப்போம்.*
*இருக்கும் காலமாவது நிறைவாய் வாழ்வோம்.*

## கதி

*காப்பியனின் சினத்தால் அகத்தியம் அழிந்ததாம்*
*கண்ணகியின் சீற்றத்தால் சங்கமே எரிந்ததாம் - மாசறு பெண்ணே*
*உந்தன் சாபத்தால் எக்கதி அடைவேனோ*
*துர்கதியோ? நிர்கதியோ? அதோகதியோ?*

## காமமே

*நேரியப் பார்வை சொல்லவில்லை- இயையா*
*கூரியப் புன்னகை கொல்லுதடி.*

*ஒற்றைக் குழலது சாக்குஅடி - விரல்*
*நெற்றியை நீவுதல் சாட்சிஅடி.*

*நாசியின் பக்கம் முத்தொளியா?- வெப்ப*
*மூச்சில் முளைக்கும் மதுத்துளியா?*

*இதழ்களின் துடிப்பொலி ஆற்றல் - அது*
*விழிகளின் நடிப்பொளி மாற்றம்.*

*கழுத்தை கைவிரல் மறைக்கும் - கண்*
*கீழ்செலும் பாதையை அடைக்கும்.*

*சரியாத ஆடையோ படும்பெரும்பாடும்- அம்*
*முறியுமோ இடையும் திடும்நாணலாடும்.*

*மென்னடையோ விரைந்தவுடன் தளரும் - முகம்*
*பின்விடுக்கும் பின்னலுடன் திரும்பும்*

*விரிந்தகண் எனைமட்டும் குறிக்கும் - குவி*
*அலைக்கதிர் உயிரோடு எரிக்கும்.*

*சொல்லாத வரைதான் பெருங்காதலே - வாய்*
*சொல்லி விட்டாலோ சிறும்...*

## பேராசைக்காரி

*நீ பேராசைக்காரி*
*மனமகல காட்டிவிட்டு*
*பார்வையுழ கண்டிருந்து*
*காதல் முளையரும்ப புன்னகைத்து*
*பசுமை செழிக்க பாடியாடிவிட்டு*
*செந்நெல்மணிகள் குலுங்கியபோது*
*பச்சரிசிப்பல் தெரிய சலங்கையிட்டு*
*எண்ணங்களை உணர்வுகளை*
*கனவுகளை காகிதங்களை*
*மூட்டை மூட்டையாய்*
*தூக்கிப் போனவளே*
*நீ ஒரு பேராசைக்காரி !*

*நான் என்ன செவிடா*
*நீ என்ன ஊமையா*
*பேசு!பேசு!*
*மௌனந்தான் உனதாயுதமா?*
*என்னை ஏனம்மா சித்திரவதை செய்கிறாய்*
*நீ பேசினால் உன்மனம் புரியும்*
*பேசாமல் இருப்பதினால்*
*எத்தனை கற்பனைகள்*
*ஆ, அத்தனையும் வேதனைகள் !*

*சித்திரமே என்றதனால் பேசாமல் போனாயோ?*
*சிலையே என்றதனால் கல்லாய்தான் ஆனாயோ?*
*எனக்கு நீ ஒரு குழந்தைதான்*
*அதனால்தான்*
*உன் மௌனச் சேட்டைகளுக்கு*
*நானே கற்பனையில்*
*மரணச்சாட்டையடி கொடுத்துக் கொள்கிறேன்*
*என் உயிரே*
*என்னால் நடிக்க இயலாது.*
*நான்தான் சொன்னேனே உன்னை குழந்தையென்று*
*குழந்தையை ஏமாற்றலாமா?*

என்மனக் கிணற்றடியில்
ஊறிய எண்ண மட்டைகள்
உன் காலடியில் போட்டேன் .
அடித்துலர்த்தி திரித்து
ஒரு கயிறயாக்குவாயென்று
அது நம்மை பிணைக்குமென்று
ஆனால்
அது எனக்கு
தூக்குக் கயிறாகுமென்று நினைக்கவில்லை .

என் வாழ்வே
என்மேல் அன்பு செலுத்த வேண்டாம்
பரவாயில்லை
என்னை மறந்தும் விடலாம்
வேண்டாம் என்னவில்லை .
ஆனால்,
வேண்டாம் என்னை வெறுக்க வேண்டாம்
என் பேச்சும் நடப்பும்
உனக்கு இடையூறென்று சொல்
இதோ இப்பொழுதே
உன்னை மறந்துவிடுகிறேன்
அது முடியுமா? முடியாதா?
அது எனக்கே தெரியாது
ஆனாலும் முயல்வேன் மூச்சுபோகு மட்டும்
எனதன்பே !
ஆனாலும் உனக்கு நன்றிகள்
உன்னைச் சந்தித்தேனே
அது நான் செய்த புண்ணியம்
உன்னை நேசித்தேனே
நான் பெரிய பாக்கியவான்
இல்லாவிட்டால்
சோகக் கடலின் அடியில்
மூச்சின்றி பேச்சின்றி
என்றோ மடிந்திருப்பேன் .
கைதூக்கி விட்டாய்
படகில் கொணர்ந்தாய்

கரை சேர்த்தாய்
போய்விட்டாய்

என் இதயமே
உன்னோடு வாழத்தான் எனக்காசை
'உன்னோடு வாழ்கிறேன்' என சொல்
இந்த உலகையே துறந்து விடுகிறேன்
நீதான் எனதுலகம்
நாமிருவரும்
ஏதோ ஒரு இனந்தெரியா காட்டில்
மலையோரச்சரிவில்
ஓடையின் கரையில்
பறவைகளாய் வாழ்ந்திருப்போம்
வாழ்வெல்லாம் களித்திருப்போம்

என் கண்ணே
ஏன் என்னைப் பார்க்கவும் வலிக்கின்றதா?
நெஞ்சில் ஒன்றுண்டு
கண்ணில் ஒன்றுமிழ
உன்னால் முடியாது
ஏனென்றால் இன்னும் நீ ஒரு குழந்தை

உன் கண்ணின் மழலைகள்
எனக்கு விளங்காத இன்பங்கள்!
உன் கண்ணின் ஓரத்தில் ஏன் அச்சோகம்?
என் வாழ்வுகண்டு பரிதாபமா?

என்னால் உன்னை இன்புறுத்த முடியவில்லை
ஆனால்
என்னால் நீ துன்புறுவதை
என்மனம் சிறிதும் சகிக்கவில்லை

நீயும் ஒரு பெண்தானே
உனக்கும்
ஆசைகள், கனவுகள், கற்பனைகள்
எல்லாம் இருக்குமென மறந்துவிட்டேன்

*உன்னிடம் எதிர்பார்த்தேன்*
*ஆனால் நீ என்னிடம்*
*எதிர்பார்த்தது என்னவென புரியவில்லை*
*அந்தியிலும் புரியவில்லை*
*சந்திரனிலும் தெரியவில்லை,*
*மடல்*
*மடல் வருமென காத்திருந்தேன்*
*தாழையன்பு மணம் பரப்புமென காத்திருந்தேன்*
*மடல் வருமென பார்த்திருந்தேன்*
*காதல்மணிகள் உதிருமென பார்த்திருந்தேன்*
*மடல் வரும் வருமென பூத்திருந்தேன்*
*தேனன்பு முத்தங்கள் சொரியுமென பூத்திருந்தேன்*
*காத்ததுதான் மிச்சம்*
*பார்த்துப் பார்த்து கண்கள் பூத்ததுதான் சொச்சம்*
*வாடியதென் மணம் அனிச்சம்*
*கற்பனையில் முளைத்தது பேரச்சம்*
*ஒரு வேளை எனைநீ மறந்தாயென்று!*

## உதிரும் நினைவுகள்

*அழகைப் பார்த்திருக்க இமைகள் மூடுமா?*
*இன்பத்தேன் வெள்ளத்தில் குளிக்க மனந்தான் வாடுமா?*
*நாட்கணக்கில் பார்த்திருந்தும்*
*கண்கள் மணிக்கணக்கில் நிலைத்திருந்தும்*
*ஒரு நொடிப் பிரிவில்*
*எங்கேதான் ஓடி ஒளிகின்றாயோ?*
*எத்தனை நாளாயிற்று உனைப் பார்த்து !*

*உன்முகத்தை நினைவுறுத்திப் பார்க்கிறேன்*
*ஆயிரமாயிரம் இடங்களில் பார்க்கிறேன்*
*சிரிக்கப் பார்க்கிறேன்*
*அழுகப் பார்க்கிறேன்*
*கோபத்தில் பார்க்கிறேன்*
*தாபத்தில் பார்க்கிறேன்*
*உறங்கப் பார்க்கிறேன்*
*நிற்கப் பார்க்கிறேன்*
*நடக்கப் பார்க்கிறேன்*
*பேசப் பார்க்கிறேன்*
*ஊடலில் பார்க்கிறேன்*
*ஓடவும் பார்க்கிறேன்*
*நினைவுகள் ஓடவும் பார்க்கிறேன்*
*ஆனாலும் அவையாவும் திரைப்படத் துண்டுகள்*
*காலத்தில் உதிர்ந்த மலர்ச் செண்டுகள்*
*நியாபகத்தில் சிறுவன்போல் பொறுக்கி வைத்துள்ளேன்*
*ஆனால், ஒன்றைப் பார்க்க மற்றொன்று பறக்கின்றது*
*எல்லாம் புகைப்படங்கள் போன்று*
*ஆனால் எல்லாம்  புகைப்படலங்கள் போன்று*
*பறந்து கரைந்து மறைந்து விடுகின்றன!*

## சொல் தேவியே சொல்

*சொல் தேவியே சொல்*
*என்ன வேண்டுமென சொல்*
*நரம்பைக் கிழித்து எடுத்து*
*நெருப்பில் வாட்டி இறுக்கி*
*இரத்தத் துளிகளைப் பரல்களாக்கி*
*கோர்த்து பாதங்களில் பூட்டவா?*

*அல்லது*
*அன்பில் ததும்பும் கண்ணீரை*
*மின்னும் முத்துக்கள் ஆக்கி*
*உன்றன் வலம்புரிக் கழுத்தில்*
*நடுங்கும் கைகளால் சூட்டவா?*

*அல்லது*
*நன்றியில் ஒளிரும் கண்களையே*
*காணிக்கையாய் காலடியில் படைக்கவா?*

*அல்லது*
*என் எலும்புக் குவியலைப் பீடமாக்கி*
*ஆன்மாவை பலியாக்கி விடட்டுமா?*
*சொல் தேவியே சொல்!*

## தூரகாலம்

*அன்று*
*நித்தம் நித்தம் பார்த்தேன்*
*சலிக்கவில்லை - உன்முகம்*
*பதியவில்லை!*

*இன்று*
*எங்கோநீ போனாலும்*
*அகலவில்லை - அமைதிமுகம்*
*மறப்பதில்லை*

*தூரம் என்ன தூரம்*
*காலம் என்ன காலம்*
*உறவென்ன மறந்து போகுமா ?- நம்*
*நினைவென்ன மறைந்து போகுமா?*

## முட்டாள்களின் அரசன்

*உன் அன்புக்காக*
*என் வாழ்வை அடகு வைத்தேன்*
*ஆனால், நீயோ*
*என்னை மரண நீதிமன்றத்திற்கு*
*இழுத்து வந்தாய்.*

*அந்த வழக்கில்*
*உன் மனசாட்சிக் கெதிராய்*
*என்னை மறுதளித்தாய்*

*நான் பைத்தியம்*
*என்னும் சிலுவையில் அறையப் பட்டேன்*
*என்னுடைய தலைக்குமேல் ஒரு வாசகம்*
*''முட்டாள்களின் அரசன்''.*

## சிபியும் நானும்

*புறவைக் காக்கத்தான்*
*பருந்தை விரட்டத்தான்*
*எழுந்தோடினான் சிபி*
*ஆனால், பருந்தோ*
*அவனுடைய சதையையே ருசி பார்த்துவீட்டு பறந்தது.*
*அவனுக்கு ஒரு கவிதை.*

*விதியிடமிருந்து என் கிளியைக் காக்க*
*பறந்தோடினேன் நானும்.*
*ஆனால், அதுவோ ..*
*மரண நகங்களால் என் இதயத்தைக் கிளறிவிட்டு மறைந்தது*
*அந்த இரணங்களில் இருந்து ஒழுகும் துளிகள்*
*எத்தனை கவிதைகள்?*

## மலரின் காதல் பரிசு

*தென்றலே நீ என்னைத் தழுவியபோது*
*என் உயிரே சிலிர்த்தது*
*அதற்குப் பரிசாக தேன்முத்தைச் சிந்தினேன்*
*ஆனால், அதை*
*ஏதோ ஒரு கருவண்டு கவ்விப் போனதேன்?*

## அழிவுச் சின்னம்

*ஏய், ஏன் அழுகிறாய்?*
*உன் காதலுக்காகவா?*
*இல்லை காதலிக்காகவா?*
*ஓ, கண்ணீரில் கவிதை எழுதுகின்றாயா?*
*யாருக்காக? உனக்காகவா? மற்றவர்க்காகவா?*
*உன் காதலி எங்கே படிக்கப் போகிறாள்?*
*அவள்தான் எப்பொழுதோ கண்மூடி விட்டாளே!*

*உம். எனக்கும் ஒரு காதலி இருந்தாள்*
*அவளும் மண்ணுடன் கலந்து விட்டாள்.*
*பறக்காத உயரமெல்லாம் பறந்தோம்*
*போகாத தேசமெல்லாம் போனோம்*
*களைப்பின்றி சலிப்பின்றி களிப்புற்றோம்*
*வாழ்வையே கவிதையாய் புனைந்தோம்.*

*ஒரு நாள்*
*புயல் வந்தது, காற்று சுழற்றியது,*
*இருள் நிறைந்தது, மின்னல் வெட்டியது,*
*என்னை மறந்து நினைவை இழந்து*
*அன்புக் கிளியைக் கொத்திக் கிளறினேன்.*

*நான் கட்டிய கூடும் குலைந்தது*
*அவளும் சரிந்தாள், விழுந்தாள், தவித்தாள்*
*விடியப் பார்க்க நானும் துடித்தேன்*
*அவளைச் சுற்றி எறும்புகள் மொய்த்தன*
*அவைஎன் தொண்டையைக் கடிக்க கொத்தினேன்*
*என்னை நானே சபித்துக் கொண்டேன்*
*என்னுடைய இறகுகளால் அவளுக்கு கல்லறை கட்டினேன்*
*என்னுடைய உடலை நானே குத்திக் கிளறியதால்*
*உதிர்ந்த உதிரங்கள் அவளுக்கு பால்வார்த்தன*
*அவளுக்காக கவிதையுமில்லை கண்ணீருமில்லை*
*நானே அவளின் நினைவு*
*நானே அவளழிவின் சின்னம்.*

## நீயும் நானும் ஜோடி

*நீயும் நானும் ஜோடின்னு*
*முடிஞ்சி வைச்சாண்டி*
*முடிச்சு போட்டாண்டி*
*முடிச்சி வைச்சாண்டி*

*யாராலும் அதை இங்கே*
*அவுக்க முடியல*
*அறுக்க முடியல*
*பிரிக்க முடியல*

*கூடிக் கூடிப் பேசி நம்மை*
*கலைக்கப் பாத்தாங்க*
*களைச்சிப் போனாங்க*
*கலைஞ்சிப் போனாங்க*

*ஆனாலும் நம் காதல் கூட்டை*
*குலைக்க முடியலை*
*அழிக்க முடியலை*
*ஒழிக்க முடியலை*

*சொத்து பத்து சேந்ததுமே*
*நாடி நின்னாங்க*
*பாடி வந்தாங்க*
*ஆடி வந்தாங்க*

*பிள்ளை குட்டி பொறந்ததுமே*
*ஓடி வந்தாங்க*
*சேர்ந்துகிட்டாங்க*
*கூடிக்கிட்டாங்க*

## நிழலின் நிழல்

*ஆயிரமாயிரம் இரைச்சல்கள்*
*காற்றிலும் ஒரு காட்டாறுபோல்*
*செவிப்பறையை முட்டி மோதி*
*சவ்வூடு பரவிக் கசிந்து*
*நரம்புகளின் மடை உடைந்து*
*மூளையில் ஒரு மூலை மரத்துவிட்டது.*

*ஆயினும் மரக்கூட்டத்தில் இருந்து*
*ஒரு ஓசை மட்டும்*
*விட்டு விட்டு*
*ஒத்தடம் போல்.. கூக்கூ.. கூக்கூ..*
*எந்த மரத்திலிருந்து?*
*எந்த கிளையிலிருந்து?*
*நிழலின் நிழலை யார் காண்பது?*

## நாடகத்தின் நாடகம்

*இப்பொழுதுதான் தெரிகிறது*
*உன் இதயத்தில்*
*நீ எழுதிய*
*உன் சொந்த நாடகத்தை*
*அரங்கேற்றிக் கொண்டிருக்கிறாய்!*

*ஆனால்,*
*உன் பாத்திரத்தின்*
*வசனத்தை மட்டும்*
*மாற்றி மாற்றிப் பேசிக் கொண்டிருக்கிறாய்!*

## ஊமை நாடகம்

*உன்னைச் சந்தித்து*
*எதையெதையோ பேச நினைத்தேன்*
*துடித்தேன்*
*நாடகத்தை*
*வெவ்வேறு பிரதியெடுத்து*
*மீண்டும் மீண்டும்*
*ஒத்திகை பார்த்தேன்.*

*உனை நான் பார்த்ததும்*
*எனை நீ பிரிந்ததே*
*நினைவில் நின்றது.*

*நம் இடையில் நிகழந்ததென்ன?*
*என் இதய வட்டில் வழிவதை*
*உன் காந்தக் கண்கள் பிரதிசெய்தன.*
*பிறகு?..*
*மெல்ல இதழ்விரித்தாய்.*
*அப்புறம்?..*
*அப்புறம், நானே காணாமல் போயிருந்தேன்.*

## ஏக்கம்

*காலத்தின்*
*பின்னோக்கிய பயணத்தில்*
*ஞாபகக் குகையில்*
*நினைவுக் கல்லறையில்*
*நிகழ்வுப் பிரேதங்கண்டு*
*பயந்து அலறி*
*வெளியில் ஓடி வரும்*
*பெருமூச்சு!*

## காகிதத்தின் மேல் கவிதை

*முன்னே*
*வெள்ளைக் கம்பளங்கள்*
*அடுக்கடுக்காய் மின்னின.*

*ஒன்றை உருவினேன்*
*இலையின் நரம்போ*
*கோதிய இறகோ*
*இழையோடியது*
*வைரத்துகள்களுக்கிடையில்!*

*எனக்குள் நுழைந்தவளோ*
*என்னில் வளர்ந்தவளோ*
*மீளும் வழியின்றி*
*முட்டி மோதி மயங்கி விழுந்தாள்.*

*வெறித்து நோக்கினேன் அசைவற்று*
*மூச்சு மட்டும் அனிச்சையாய்...*
*யுகங்கள் நொடிகளாக..*
*மந்திரம் அசைத்தது வாய்,*
*கண்திறந்து மூடினாள் அல்லி!*

*குகைச்சுனையில் குளிப்பாட்டி*
*இதயவெம்மையில் துவட்டி*
*உடலெல்லாம் அதிர*
*கம்பளத்தில் கிடத்தி விட்டேன்.*

*தொடுபவர் தொட்டால் விழித்துக் கொள்வாள்*
*அள்ளிக் கொண்டால் அணைத்துக் கொள்வாள்*
*கவிதைச் சுகமோ காவியச் சுவையோ நெஞ்சில் சுரப்பாள்*
*காத்திருக்கிறாள் நித்திய கன்னி*
*நித்திய கல்யாணி!*

## சும்மா

*அ என்றால் அகமாகும்*
*உ என்றால் புறமாகும்*
*அவும் உவும் ஓ என்றால் முழுதாகும்*
*ஓ என்றால் சிறு முழுதும் பெருமுழுதாகும்*
*ம் என்றால் புலன்கள் அடங்கலாகும்*
*மான்செவி மடுத்தலாகும்*
*செவிக்குணவு ஈதலாகும்*
*பிராணமகுடிக்கு உடல்பாம்பாடும்*
*சுவாசுடல் முயங்க காலங்கள் மயங்கும்*
*சும்மா இருத்தலே இரசவாத சுகமாகும்.*

## மடல்

*தாழம் மடலதை விரித்து*
*நீவிடப் பன்னீர் தெளித்து*
*பீலியால் தடவி இறுத்து*

*செஞ்சாதி மொக்கை எடுத்து*
*அகிற்கோல் பட்டுவளை தொடுத்து*
*சந்தனக் கத்தூரி தோய்த்து*

*தமிழக் காதல் வரையவா*
*அமிழ்தும் தேனும் உறையவா*
*இடமும் பொழுதும் மறையவா*

## ஆகா... வெயிலில்தான் எத்தனை வகை!

*இளவெயில், காலைவெயில், உச்சிவெயில், மாலைவெயில், அந்திவெயில்.*

*உண்மையில்,*
*மணிக்கு மணி,*
*நிமிடத்திற்கு நிமிடம்*
*மாறும் வெயிலைக் கணக்கில் கொண்டால்,*
*குறைந்தது 12 வெயில்,*
*மிகுந்தது 720 வெயில்.*

*ஓடும் மேகத்தையும்*
*ஆடும் காற்றையும்*
*தூவும் வானத்தையும்*
*கணக்கில் சேர்த்தால்*
*இன்னும் எத்தனை வெயிலோ?*

*எண்ணிக்கையில் அடங்குவதா வெயில்?*

*எண்ணிலடங்கா பொருளுக்கும் உயிருக்கும்*
*ஒளியையும் விழிப்பையும்*
*துடிப்பையும் உயிர்ப்பையும்*
*ஏன், மரணத்தையும் ஒருங்கே வழங்கும்*
*வெயில்கள்தான் எத்தனை எத்தனை?*

*எண்ணிக்கையில் அடங்குவதா வெயில்?*
*ஊம்..., வெயிலில்தான் எத்தனை வகை!*

## துளியும் சந்தேகம் இல்லை

*ஆசைக் குறிப்பால்*
*அவள் நெற்றியில் முகிழ்த்த திவலைகளைக் கண்டப் பிறகு*

*நிலவிலும் நீருண்டு என்பதில்*
*எனக்கு துளியும் சந்தேகம் இல்லை.*

## அனிச்சை

*சுவாசம் போன்றே - உன்*
*பெயரைச் சொல்வதும் - எனக்கு*
*அனிச்சையாகிப் போனது.*

## மயக்கம்

*கொடிமலரில் மொய்க்கா தேன்வண்டு - அவள்*
*கூந்தல் மாலையைச் சுழல்வதேனோ?*

*மலர்விழிக் கருமணி கண்டவொன்று - அதை*
*மற்றோர் வண்டென மயங்குமேனோ?*

*அவள்நுதல் கண்ட நிலவுமே - வேறு*
*பிறையின் எழிலென கலங்குமேனோ?*

*செவ்விதழ் காண் மாதுளையும் - தன்*
*நிறம்வெளிறி முத்துஉதிரி கழல்வதேனோ?*

## உன் பெயரும் என் உருவும்

*என்மூச்செலாம் கலந்த உன்பெயர்*
*செங்குருதியில் கரைந்தும் மிதந்தும்*
*நுண்ணுயிர் அணுவெலாம் நிறைந்தும்*
*என்உருவாகவே சிலைத்து உறைந்ததடி!*

*எனை யாரும்*
*தொட்டால் உன்பெயர் ஒலிக்கின்றது*
*தட்டினால் உன்பெயர் உதிர்கின்றது*
*கொன்றாலும் உன்பெயரே விண்ஒளிருமோ? - மண்*
*தின்றாலும் உன்பெயரே நிலம்அதிருமோ?*

## தீக்குளிப்பு

*கவிழ்குவி விழிவிடு அனல்கணை*
*நெஞ்சம் துளைப்ப,*
*இலக்குஅதை எய்திய தன்திறன்*
*கடைக்கண் களிக்க,*
*தீப்பொறி உடல்எலாம் பற்றிப்படர,*
*அமிழ்துஊறு செவ்விதழ் குறுநகை புரிந்தது,*
*முத்துக்குளிக்க வருவேன் எனவே!*

## வெள்ளம்

*பேச்சில் ஓயினும்*
*மூச்சில் பாயும் - உன்*
*பெயர் வெள்ளம்.*

## காதல்

முதல் பொருள்
கருப் பொருள்
கடக்கும்
உரிப்பொருள்.

## வெறுமை

*கிறக்கமும் மயக்கமுமாய்*
*மிதக்கின்ற நினைவுகளுமாய்*
*கனவிலா உறக்கமுமாய்*
*பறக்கிறது ஆயுள்.*

## விந்தை

எனைத் தொடும் போதும்
உனைத் தீண்டும் இன்பம்
விந்தையடி.

## அங்கும் இங்கும்

*அங்கே நீ அழுகிறாயா என்ன?*
*இங்கே என் நெஞ்சம் விம்முதடி?*

*1. ஒற்றைச் சிப்பிக்குள்*
*இத்தனை முத்துகளா?*
*பற்கள்!*

*2. சூறைக் காற்று*
*வெற்றிட மையம்...*
*நீ!*

*3. மேகம் இசையும்*
*தோகை அசைய*
*மழை.*

*4. மெல்லப் போர்த்த இரவை*
*வெருட்டென உருவியது*
*பகல்.*

*5. நிலவின் ஒளியில்*
*குளத்து நீரில்*
*நீந்தும் நிலா.*

*6. குளத்து நீரில்*
*குளிக்கும் நிலவை*
*சிமிட்டும் மீன்கள்.*

*7. மௌனம் புன்னகையாய்*
*புன்னகை சிரிப்பாய்*
*முகமாகும் நிலவு.*

*8. இன்று மொட்டு*
*நாளை மலர்*
*நேற்று இல்லை.*

*9. தென்றல் தொட்டது*
*மலர்கள் சிரித்தன*
*கிச்சுகிச்சு.*

*10. முருகன் கோயில்*
*பக்தர்கள் குருடாயினர்*
*வெளியில் மயில் பறந்தது.*

*11. சிப்பியின் வயிற்றில்*
*கண்ணீர்க் கட்டி*
*முத்து.*

*12. கடலைப் பார்க்கிறேன்*
*அங்கிருந்து வந்ததால்*
*நிலவைப் பார்க்கிறேன்.*

*13. இலேசில் உயர்ந்தது*
*குப்புற விழுந்தது*
*கனமழை.*

*14. பனியெங்கும் வெண்மை*
*தெளிந்தது வெண்கூகை*
*நெளிந்தது வெள்ளொலி.*

*15. காற்று அடித்தது*
*குன்று மலையானது*
*மேகம் விலகியது.*

*16. பனி மூட்டம்*
*நான் மட்டும்*
*தெரியும் குருடு.*

*17. பூமிக் கன்னி*
*அழகுப் பருக்கள்*
*மலைக் குன்றுகள்.*

*18. மரம் எனக்காக*
*நான் அதற்காக*
*சுவாசம்.*

*19. இந்தியப் புன்னகை*
*அமெரிக்கத் தண்ணுதல்*
*நிலவுப் பிறை.*

*20. பகல் குடை*
*இரவு மழை*
*கார் மேகம்.*

*21. உயிர்கள் மின்னின*
*நிலவின் ஒளியில்*
*மனிதர் இருளர்.*

*22. மண்ணைப் பிளந்தது*
*நாளைய மரம்*
*நேற்றைய விதை.*

*23. வெள்ளிப் பனிமேடை*
*மரங்கள் இரசித்தன*
*காற்றுக் கச்சேரி.*

*24. காற்று சொல்ல*
*மரங்கள் கத்தின*
*பனிமணல் தமிழ்.*

*25. மாலைச் செங்கதிர்*
*மீன்கள் மின்னின*
*கடலின் மதியம்.*

*26. முட்செடி ரோசா*
*அழகு தைக்கிறது*
*வாசம் வழிகிறது.*

*27. மூடிய மேகம்*
*திமிறி எழுகுது*
*திணறிய நிலவு.*

*28. மழைத் துளி*
*பெரும் கடல்*
*விழுந்து கலந்து.*

*29. மழைத் துளி*
*கவ்வியது மீன்*
*முத்தெனவே.*

*30. வணிகம் ஆட்சி*
*புனிதம் மீட்சி*
*மனிதம் வீட்சி.*

*31. மரக்கோடு முறிந்தது*
*குருவிக்கூடு தெரிந்தது*
*எரியும் கரித்துண்டுள்.*

*32. நாரையின் இயல்பு உறைதல்*
*மீனின் இயல்பு மறைதல்*
*வெற்றியின் இயல்பு விரைதல்.*

*33. பாலைக் குடித்தேன்*
*தேன் எனவே*
*குயில் கூவியது.*

*34. முகம் பால் நிலவு*
*சொல் தேன் உணவு*
*அம்மா உன் நினைவு.*

*35. தேய்பிறை சோகம்*
*வளர்பிறை மோகம்*
*முழுநிலவு போகம்.*

*36. தாமரை கதிர்*
*அல்லி நிலா*
*நான் நீ.*

*37. தாமரை பகலில்*
*அல்லி இரவில்*
*நான் உன்னில்.*

*38. கதிருக்கு தாமரை*
*நிலவுக்கு அல்லி*
*உனக்கு நான்.*

*39. பகலுக்கு தாமரை*
*இரவுக்கு குவளை*
*உனக்கு நான்.*

*40. பகலின் வெம்மைக்கு தாமரை*
*இரவின் தண்மைக்கு குவளை*
*உன்றன் மென்மைக்கு நான்.*

*41. முத்துப் பரலிடை ஊறல்*
*சிப்பி இதழிடை மீறல்*
*தேந்தேன் தேறல்.*

*42. உதிரும் இலைகள்*
*கலகல கரணம்*
*மரங்கள் இரசனை.*

*43. நிலவு மலர் பெண்*
*தண்மை மென்மை இனிமை*
*உலகு வாழ்வு முக்கனி.*

*44. பொங்கிப் பொங்கி வழிகிறது*
*அமுத சுரபி நிலவு*
*தண்மைப் பசியின் உலகு.*

*45. வெண் மேக நிழல்*
*நீரில் நாரை*
*கலங்கும் மீன்.*

*46. நிலவின் அழகும்*
*காதலி முகமும்*
*வியத்தல் உளமே.*

*47. விழித்துப் பார்க்கிறேன்*
*உடல் அசைவில்லை*
*இறந்து விட்டேனா?*

*48. வசந்த காலம்*
*கலந்த வாசம்*
*வண்டுகள் மயங்கும்.*

*49. பிறக்க எப்படியோ*
*இறக்கவும் அப்படியே*
*அழுவது அழவைப்பது.*

*50. எங்கள் காதல்*
*அத்திப் பழம்*
*தெரியாது மலர்ந்தது.*

*51. பூக்கள் பூக்க*
*ஈக்கள் மொய்க்க*
*குரங்குகள் பிய்க்கும்.*

*52. மரம் உதிர்க்க*
*மண் சிலிர்க்கும்*
*நன்றி மலர்.*

*53. மேகம் மென்துகில்*
*மூடும் வெண்மதி*
*கூடும் ஆவல்.*

*54. நீ என் கனவு*
*நான் உன் நினைவு*
*நாம் அம் நிலவு.*

*55. நிலவின் குளிரில்*
*மேகம் உறையும்*
*தேகம் மறையும்.*

*56. நிலவின் பொழிவில்*
*மனவலை அமிழ*
*ஞானம் முகிழும்.*

*57. இருவரும் குடித்தோம்*
*கைக்குட நீரில்*
*இருவர் முகம்.*

*58. நேற்றைய நினைவும்*
*நாளைய கனவும்*
*இன்றை இழுக்கும்.*

*59. கேட்டும் பார்க்காதது*
*உணர்ந்தும் காணாதது*
*ஞானக் குயில்.*

*60. மழையில் மண்வாசம்*
*காற்றில் மலர்வாசம்*
*காதலில் மனவாசம்.*

*61. கரும்பாலை வாசம்*
*மூக்கும் சுவைக்கும்*
*இனிப்பு.*

*62. விசும்பின் மீன்களா*
*குளத்தின் கயல்களா*
*தென்றலின் மின்மினி*

*63.தோகை வானம்*
*முல்லைத் தாரை*
*தந்த நிலவு.*

64. மலை மறைத்ததா
நிலவு ஒளிந்ததா
விழி தொலைத்ததா

65. பல இடம்
பல காலம்
பல நிலா.

66. பகலின் வெம்மையே
நிலவின் தண்மையே
உலகின் உண்மையே.

67. வானில் ஓர்நிலா
குடக்கை நீர்நிலா
அவளொடு மூநிலா.

68. கோலப் புள்ளியா
நிலா இட்டது
புள்ளிக் கோலமா

69. இமைய நிலா
பனியினும் தண்மை
மனதிலும் நின்மை.

70. வண்ணமலர் கோப்பை
வாசப்புகை மூட்டம்
தண்ணம் தேன்ஈ.

71. தாரகைக் கொடி
ஒற்றை அல்லி
விரி சிறகு.

72. கம்பளிக் கூட்டுள்
உருமாறிய கனவு
வண்ணத்துப் பூச்சி.

*73. பிறந்த வீடு*
*முதுகில் சுமை*
*ஊரும் நத்தை.*

*74. சூரியன் வெம்மை*
*சந்திரன் தண்மை*
*உயிரின் சுவாசம்.*

*75. கதிரின் இழைவு*
*மதியின் குழைவு*
*மலரின் வண்ணம் தேன்.*

*76. குளிர் வெண்குடை*
*விரிக்கும் சுருக்கும்*
*உலக அரசி.*

*77. கதிரின் வெள்ளொளி*
*மதியின் தண்ணொளி*
*உலகு இருநிதி.*

*78. இரவு நிலவு*
*அகம் இலவு*
*பகல் மலர்.*

*79. உலகம் சுழலும்*
*குவலயம் பெயரும்*
*நில்லகம் வடமீன்.*

*80. ஊறும் கரும்பு*
*ஊரும் வல்லி*
*தொய்யில் தோள்.*

*81. செங்கதிர் வெம்மை*
*வெண்கதிர் தண்மை*
*இருமைக் கண்மை.*

*82. மொய்க்கும் வண்டு
பறக்கும் மலர்
தேன் வாசம்.*

*83. இழுக்கும் கடல்
மறுக்கும் நிலம்
சரியும் மணல்.*

*84. கழிமுகக் குளம்
சிற்றலை கூட்டும்
பண்ணெழு சங்கம்.*

*85. முகம் மறைக்கும்
மேகம் விலக்கும்
இமையா கண்.*

*86. காவிரிச் சந்தனமா
பூந்தோள் அகிலா
முத்தின் வாசம்.*

*87. மீன்களின் முணுமுணுப்பு
உரத்தக் குரலில்
நிலவற்ற இரவில்.*

*88. கடல் சங்கு
இரசிக்கும் கொண்டல்
இசைக்கும் குழல்*

*89. வெள்ளை வானம்
கருப்பு நிலவு
அவள் கண்கள்*

*90. பிறையும் முழுநிலவும்
உறையுமா ஒருநேரம்?
நுதலொடு முகம்!*

*91. ஓரம்பு நஞ்சு*
*மற்றொன்று அமிழ்தம்*
*எப்போது எதுவரும்?*

*92. மலர் ராணி*
*தீண்டும் விரல்*
*முள் ரோசா*

*93. குளக் குவளை*
*கரை முல்லை*
*அவள் கண்ணீர்.*

*94. கூட்டை மறந்த*
*குயிலின் ஓலம்*
*கேட்கா காலம்.*

*95. வண்ணப் பறவை*
*கூண்டெனத் தெரிந்தும்*
*சிறகடித்துப் பார்க்கும்.*

*96. வண்ணப் பறவை*
*கூண்டதை மறந்து*
*சிறகினை அடிக்கும்.*

*97. கட்டி வலியும்*
*சிப்பி நலிவும்*
*முத்து ஒளியும்.*

*98. உடல் விட்டு*
*உயிர் பிரியும்*
*உன் பெயர்-காற்று.*

*99. திவலைத் தவளை*
*புரள் பரல்*
*ஓடை கலகலப்பு.*

*100. நிழலாடும் உருவம்*
*நிலையாகும் நெஞ்சம்*
*உன் பேர் மந்திரம்.*

*101. அல்லி வண்டு*
*துள்ளி (தாவி) மூழ்கும்*
*குளத்து நிலவு.*

*102. உள்ளிழுக் காற்றில்*
*என் இதயம் எழுதி*
*வெளியிடும் உன்பெயர்.*

*103. உன் பெயர் இழைத்தது*
*நா இதழல்ல*
*இதயத்தின் துடிப்பு.*

*(அல்லது)*

*உன் பெயர் இழைத்தது*
*நா இதழல்ல*
*நெஞ்சின் வாசம்.*

*104. பழமையில் என்னைத் தேடுகிறாய்*
*புதுமையில் உன்னை நாடுகிறேன்*
*இடையினில் நழுவுவது காலம்.*

*105. நீல வானில் நிலவு*
*குளத்து நீரில் நிலவு*
*எது உண்மை பிம்பம்?*

*106. குளநீர் கைக்குடம்*
*தப்பும் மீன்*
*சிக்கும் நிலா.*

*107. குளிர் தென்றல் கொடி அணைக்க*
*சிலிர் மொட்டு இதழ் விரிக்க*
*தளிர் வாசம் தேன் சொரியும்.*

*108. அமாவாசை இரவு*
*அம்மா தோசை*
*பௌர்ணமி.*

*109. இலையிலா மரம்*
*கலையிலா நிலவு*
*முளைக்கும் வசந்தம்*

*110. பனியில் வெற்று வெண்மை*
*வசந்தத்தில் ஒற்றைப் பசுமை*
*உதிரில் சருகமைவு*
*வானவில் நாணும் பலவண்ணம்.*

*111. உயிர்த்தெழுந்து ஆடும்*
*எலும்புக் கூடு (மரங்)கள்*
*மழைத் துளி மந்திரம்!*

*112. ஆறிதழ்ப் பனிமலர்*
*உருகும் மறையும்*
*காற்றோ குளிரும்.*

*113. வான் நிற்கும் கழுகு*
*தரை இறங்கும் நிழல்*
*வளை தேடும் எலி.*

*114. அந்தி வான் மகள்*
*திருத்தும் பொன்னாடை*
*வெள்ளி நீரோடை*

*115. மண் நனைக்கும் அலை*
*கடல் கரையும் நிலம்*
*நுரை ஒலிக்கும் காற்று.*

*116.நிலைக்கும் கண்கள்*
*துளைக்கும் நெஞ்சம்*
*மௌன வெளி.*

*117. உள் சுவாசம்*
*மௌன அழுத்தம்*
*மெய்யெலாம் பொத்தல்.*

*(காதலோ /ஞானமோ)*
*118. கண்டால்*
*பேச்சு மறக்கும்*
*மூச்சு இழக்கும்*
*உயிர் இறந்து பிறக்கும்.*

*119. வெண்திரை விலக்கி*
*தன்முகம் காட்டும்*
*குன்று எழில்.*

*120. முதல் துளிர்*
*கை அசைக்கும்*
*(சருகு) முடிபு இலை.*

*121. அணைக்க அணைக்க*
*மீண்டும் மீண்டும்*
*தோன்றும் அலைகள்.*

*122. பிறப்பறு வேளை*
*உறவுறு காலை*
*என் செய்வேன் மாலை?*

*123. கொதிக்கும் எரிமலை*
*பிளக்கும் எந்நேரம்*
*வெண் துளை.*

*124. விரியும் மலர்*
*திரியும் மணம்*
*அறியும் வண்டு.*

*(உணவில் முடி)*
*125. தூக்கி எறியும்*
*கை உதறும்*
*கரு நாகம்.*

*126.கண்கள் பேசும்*
*இதயம் கேட்கும்*
*இரகசிய மௌனம்.*

*127. சுழலும் சுழலும் உடல்*
*சுழலா அச்சு*
*வெளியாய் ஒளிரும்.*

*128. மூங்கில் இசைப்பு*
*குயில் பறப்பு*
*துணை அழைப்பு?!*

*129. தோன்றும் மறையும்*
*கண்ணாமூச்சி*
*அம் முகம்.*

*130. குமிழி*
*வெடிக்கும்*
*சூனியம்.*

*131. அப்பா கண்கள்*
*கருப்பு வெள்ளை*
*அழ யத்தனிக்...*

*132. உதிர்ந்த இலைகள்*
*திரும்பித் திரும்பிப் பார்க்கும்*
*போகும் மனமின்றி.*

*133. ஈரமான இரவு*
*தடையம் இல்லை*
*புழுங்கும் பகல்.*

*134. கற்பனை கனவு*
*நிசத்துடன் மோதும்*
*இழக்கும் காலம்.*

*135. இதமான ஞாயிறு*
*மேகம் தூக்கும்*
*கடல் மூழ்காது.*

*136. எதற்கெனத் தெரியாமல்*
*உச்சரிக்கும் என் இதழ்*
*உன் பெயர்.*

*137. தாமரை மூடும்*
*அல்லி திறக்கும்*
*முழு நிலவு.*

*138. புறம் காட்டும் பத்மா*
*அகம் தாட்டும் குமுதா*
*அல் ஆடும் சந்திரன்.*

*139. மண்புல் காற்று ஆடும்*
*மூங்கில் வான் வளையும்*
*மூநாமதி நாணும் மறையும்.*

*140. முள் உள்ள ரோசா*
*மிகு கவனம் தேவை*
*கரம்பற்றுகையில்.*

*141. முழுதும் உதிரும்*
*மீண்டும் மலரும்*
*அதே நிலவு.*

*142. யாரும் காணா*
*முழு நிலவு*
*இருள் நிலவு.*

*143. கனவு நிலைக்கும்*
*நிசம் பறக்கும்*
*நனவாகும் கனவு.*

*144.* வாழ்வது கனவு
கனவின் பின் கனவு
நிசம் தீங்கனவு.

*145.* அலைகள் அள்ளிவரும்
நுரை நுரையாய்
சுவாசக் குமிழிகள்.

*146.* இரவுப் படுக்கை
நிசம்தான் நீ இல்லை
கனவிலுமா?

*147.* தணல் காற்று
உறைந்த காதல்
பெரும் மூச்சு.

*148.*வண்ணச் சிறகு
கோணம் மாற்றும்
பலத்த காற்று.

*149.* தும்பிச் சிறகு
படபடக்கும்
புயல் காற்று.

*150.* ரோசா இதழ்
பனித் திவலை
வான வில்.

*151.* காலை அல்லி
இதழ் குவிக்கும்
நிலா தண்டுளி.

*152.* நான் வான் செல்வன்
நிலவு மண் வருவள்
இடை வெளி உறைவம்.

153. கரும் படலை
மஞ்சள் பூங்கொத்து
மாமரம் கூவும்.

154. மனவெளி
எதிரொளி
நிலவொளி.

155. கண்ட காட்சி
கொண்ட படிப்பினை
இருக்கும் அபாயம்
உரைக்கும் பறவை
கூட்டுக்கதை மாலை.

156. காக்கை துரத்தும்
மாமர நிழல்
குயில் ஒளியும்.

157. மலர்மீது நடக்காமல்
முள்மீது நடந்தேன்
கால் பூத்தது.

158. அமாவாசை
கொண்டாடும்
காக்கை.

159.காட்டும்
கண்ணாடியை உடைத்தாலும்
கறை மறைவதில்லை.

160. சேவலின் குரல்
கழுத்தை நெரிக்க
ஊரைக் கூட்டும்.

161. ஊமை பேசாது
காதும் கேட்காது
செய்கை புரியும்.

*162. ஏர் உழும்*
*வானில்*
*மின்னல்.*

*163. ஞாயிறு விழும்*
*உயிர் தோற்றும்*
*நிலவு எழும்.*

*164. அல்லி மட்டுமா*
*நுண்ணுயிர் கோடி*
*நிலவின் ஒளியில்.*

*165. அரசியல் கூட்டம்*
*நடுநிசித் தூக்கம்*
*ஊளை நாய்.*

*166. கட்டணச் சாலை*
*பராமரிக்கும்*
*குண்டும் குழியும்.*

*167. மாடுகள் உழும்*
*உற்சாகமாய்*
*தீவனப் பயிர்.*

*168. எப்படிச் சுமந்தாய்*
*உடலை மட்டும்*
*உயிரோ என்னிடம்.*

*சிறு நாடகம்*

*169. கண்கள் விருப்பம்*
*இமையோரம் பனிக்கும்*
*இதழ்கள் மறுக்கும்.*

*கண்ணைப் பார்*
*இப்பொழுது சொல்*
*'விரும்பவே இல்லை'.*

*‘விரும்பியதே இல்லையா?’*
*வாய் இறுக*
*தலை அசையும்.*

*சொல்ல மாட்டாயா?*
*பதில் தெரியாதா?*
*தலை மட்டும் அசைத்தால்?*

*170. இதழ்*
*இதழிடை*
*முத்தம்*

*171. நிலவைத் தீண்டும்*
*நாரைகள் மின்னும்*
*கூடுதல் வெண்மை.*

*172. விதைத்த பயிர்கள்*
*போராடும்*
*விதையாக் களைகள்.*

*173. பாம்பு பதுங்கும்*
*தவளை கத்தும்*
*சத்தமின்றி.*

*174. நேர் நடை*
*அந்தரத்தில் கால்*
*குறுக்கில் பாம்பு.*

*175. நிலவிலா விண்*
*பெண்ணிலா மண்*
*பொருளிலா சொல்.*

*176. கதிரொளி மண் உழும்*
*நிலவொளித் தண் விழும்*
*உயிர்க்கடல் முளை விடும்.*

*177. முதல் மழை*
*வீசும் வாசம்*
*மண் பூத்தது.*

*178. கனிந்து வெடிக்கும்*
*இனிப்பு வீசும்*
*பலாப் பழம்.*

*179. குளிக்கும் நதி*
*மறைக்கும் மாமரம்*
*மஞ்சள் பூந்திரை.*

*180. காய்க்காமல்*
*கனியாமல்*
*உதிரும் மலர்.*

*181. கொய்யும் நிலவு*
*மீண்டும் முகிழ்க்கும்*
*முல்லை அரும்பு.*
*/*
*நிலவு கொய்கிறது*
*மீண்டும் முகிழ்க்கிறது*
*முல்லை அரும்பு.*

*182. அவள் காண்பது*
*ஒரு மலர்*
*அது காண்பதோ*
*இரு வண்டு.*

*183. கண்கள் இரசிக்கும்*
*மலர்கள்*
*கால்கள் நசுக்கும்.*

*184. மறையும் நிலவு*
*குரைக்கும் நாய்*
*விலகும் மேகம்.*

*185. துரத்தும் சேவல்*
*அலகு வெல்லும்*
*பறக்கும் பெட்டை.*

*186. கிழக்கு மஞ்சள் திங்கள்*
*மேற்குச் செம்மை ஞாயிறு*
*இடை அது செங்காந்தள்.*

*187. மரம்*
*நீந்தும்*
*காற்று.*

*188. இரவு முத்து*
*பகல் வைரம்*
*(அது என்ன?)*
*பனித் துளி.*

*189. பூக்கள்*
*அஞ்சுவதில்லை*
*புலிகள்.*

*190. துன்புறும்*
*மலை ஏறும்போது*
*காட்டு ரோசா.*

*191. குளத்துப் பாசி*
*தென்றல் தாலாட்டும்*
*குட்டித் தவளை.*

*192. தவளை*
*நீந்தாமல் மிதக்கும்*
*தாமரை இலை.*

*193. நாற்றம்*
*நகரம் எங்கும்*
*கூவம்.*

*194. இசை*
*நடுங்கும்*
*குளிர்.*

*195. பொருள்*
*கரையும்*
*வெளி.*

*196. வெளி*
*ஊறும்*
*பொருள்.*

*197. நிலைமை*
*நெகிழும்*
*நிலையாமை.*

*198. குமிழிகள்*
*குறுக்கு-வெட்டும்*
*வெளி.*

*199. வெளி*
*விரியும்*
*ஒளி.*

*200.பொருள்*
*இருளும்*
*ஒளி.*

*201. கடுகு விதை*
*தலை தூக்கி*
*முதுகு இறக்கும்*
*சிறு மலை.*

*202. நிலவின்*
*குடையிலுமா*
*பொத்தல்கள்?*

*203. மணி முடியில்*
*கணக்கிலா வைரங்கள்*
*நிலவிலா இரவு.*

*204. கருங்கொண்டை*
*முல்லை அலங்காரம்*
*பெண்ணைக் காணோம்.*

*205. குளநீர் அலைகள்*
*காற்றுடன் போட்டி*
*தொடர் தோல்வி.*

*206. வென்றது நீரலை*
*தொட்டு மீளும் போட்டியில்*
*தோற்றது காற்று.*

*207. மலர்கள் தூவி*
*ஆற்றை வாழ்த்தும்*
*கரை மரம்.*

*208. அரும்பு மொட்டின்றி*
*வெள்ளாறு பூத்தது*
*வண்ண வண்ண மலர்கள்.*

படித்ததோ பாதுகாப்பும், சட்டமும், ஆங்கிலமும். பிடித்ததோ தேமதுரத் தமிழை. பதவிகள் பல வகித்தாலும், பட்டங்கள் பல பெற்றாலும் - நாடுவதும் தேடுவதும் தமிழ் வழியையே. தீனதயாளன் தமிழுக்காய் சொல்லாக்கியன் ஆகினார். சொற்களைத் தேடினார். சுவையுடன் சொல்லவும் புறப்பட்டார். அவரின் புறப்பாட்டால் பல நூல்கள் வெளிவந்தன. திருக்குறள் மறு வாசிப்பு அவரின் ஆராய்ச்சியின் உச்சம் என்றே எண்ணுகின்றேன். ஆராய்ச்சி வல்லுனரான அவர் கவிதை என்னும் கடலினுள் மூழ்கி, எம்மையும் மூழ்க வைத்திட எண்ணங் கொண்டார். அதன் விளைவுதான் "வாடாத மலர்" என்னும் கவிதை நூலாக மணம்பரப்ப வந்திருக்கிறது.

மகாதேவஐயர் ஜெயராமசர்மா

வானவில்லின் ஏழு வண்ணங்களைப் போல், 'இயற்கை'யில் தொடங்கி, சமூகம், தமிழ், ஞானப் பிதற்றல்கள், அன்பின் உறவுகள், வாடாத காதல், வியப்பின் கூவல் வரை ஏழு தலைப்புகளின்கீழ் தனது கவிதைகளைப் படைத்தளித்துள்ளார் கவிஞர் சொல்லாக்கியன். வானவில்லின் அழகில் எந்த வண்ணம் அழகென்று பிரித்துக்கூற முடியாதோ, அவ்வாறே இந்த ஏழு தலைப்புகளிலுள்ள கவிதைகளும் என்னை ஒருசேரக் கவர்ந்தன.

மு. முருகேஷ்



சொல்லாக்கியம்
வெளியீடு

விலை ரூ. 320